வேறு.

பொன்னருமணிமார்பன் பூமேலயனறியா
யென்னவெடுத்தோதியே விடைபெற்றேகியபின்
பன்னுகவாடகம்பொற் பாதமெனப்பாடியிடச்
சென்றவுண்சோறளித்தாள் சிவகாமசுந்தரியே. (அச)

ஞாலமறியவெங்கணாயகி யாரீத்தவன்னக்
கோலவருளுண்டு குலாப்பெருகிக்கூத்தாடி
மூலவிலங்கமமர் மூபூச்சுடர்பின்னுந்தொழுது
சாதமகிழ்ந்து தருக்கினார்தண்டமிழார். (அரு)

பேசிக்கடைதோறும்போய்ப் பிச்சைகொண்டிங்குண்டிருத்தல்
வாசிக்களிப்புடைத்தாம் வண்ணமெனத்தண்ணளியார்
தேசுற்றிருந்தார் சிலகாலஞ்செந்தமிழாற்
பூசிக்கப்பெற்றார் புனிதனடித்தாமரையே. (அசு)

வான்றேடுமறையேயோவென் றெடுத்துவண்டமிழ்ப்பா
நான்றேடொனாரோ வெனமுடித்தார்
தோன்றப்பொதுச்சூழ்ந்து சோதிவிடைபெற்றேகி
யேன்றார்வடதிக்கிடை நடக்கவன்பாளர். (அஎ)

வேறு.

ஏயும்பூகமிளநாகமினியகனி சூழ்பனைமரங்கள்
காயும்போதுங்கலந்தளிப்பக் கனையார்புனல்சேர்தினைநகர்வாய்த்
தாயுந்தமரும்துறந்தவர்தாந் தம்பிரானார்தாம்வரக்கண்
டாயும்பெரியோருள முருகியருகாவின்பம்பெருகினராய். (அஅ)

விடைகொண்டகன்றுசிவாலயங்கள் விரவிப்பரவியடிபோற்றி
மடைகொண்டுடையும்புனற்கே டினமணிநீர்வாவிமலரோடைப்
புடைகொண்டொருபாதிரித் தருவிற்புணர்சண்பகமும்பலபூவு
மடையுந்திருப்பாதிரிபுலியூ ரடைந்தாருடைந்தமனமுடையார். ()

அரங்கரனையார்விடுநூணையலே வாய்த்துரும்பினெளிதாக்கி
யுரக்குமந்தக்கற்கலத்தா லொருமாதவனைக்கரையேற்றிப்
பரக்குங்கடல்வாய்மரக்கலந்தாழ்ப் படுத்தித்தமையுங்கரையேற்று
மிரக்கம்பெரியோர்தமைக்காண விளநீர்க்கெடிலம்படிந்தாடி. (கூ)

யேகவெற்பன் மகிழ்மகட்கிடப்
பாகங்கொடுத்த பண்புபோற்றி
தில்லைமாநகர் போற்றில்லையுட்
செம்போனம்பலம் போற்றியலத்
தாடுநடகல் போற்றியென்றுங்
கென்றும்போற்றினு மென்றெனக்கிறைவ
வாற்றலில்லை யாயினும்
போற்றிபோற்றிநின் பொலன்பூவடிக்கவே.

திருச்சிற்றம்பலம்

கோயில்நான்மணிமாலை முற்றிற்று.



உ

கணபதிதுணை

பதினொன்றாந் திருமுறையுள்,

திருவெண்காடரென்னும்

# பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

இரண்டாவது

## திருவிடைமருதூர்

# மும்மணிக்கோவை

திருச்சிற்றம்பலம்.

இணைக்குறளாசிரியப்பா

தெய்வத்தாமரைக் செவ்விதின்மலர்ந்து
வாடாப்புதுமலர்த் தோடெனச்சிவந்து
சிலம்புங்கழலு மலம்பப்புனைந்து
கூற்றினைற்றன்மாற் றிப்போற்றுது
வலம்புரிநெடுமா லேனமாய்நிலம்புக்
காற்றலினகழத் தோற்றுதுநிமிர்ந்து
பத்தியடியவர் பச்சிலையிடினு
முத்திகொடுத்து முன்னின்றருளித்

திகழ்ந்துளதொருபாற் றிருவடியகஞ்சேர்ந்து
மறுவில்கற்பகத் தருகளிர்வாங்கி
நெயயிற்றோய்த்த செல்வித்தாகி
தூபுறங்கிடப்பினு நொந்துதேவர்
மடவரன்மகளிர் வணங்குபுவீழ்த்த
சின்னப்பன்மலர் தீண்டிடச்சிவந்து
பஞ்சியுமனிச்சமு மெஞ்சவெஞ்சாத்
திருவோடும்பொலியு மொருபாற்றிருவடி
நீலப்புள்ளி வாளுகிர்வேங்கைத்
தொலின்கலிங்க மேல்விரித்திசைத்து
நச்செயுற்வரக்கச் சையாய்ப்புறுத்துப்
பொலிந்துளதொருபாற் றிருவிடையிளங்கொளி
யாத்தவாடை விறித்துமீதேறியே
யிறங்குமணிமேகலை யொருங்குடன்சாத்திய
மருங்கிற்றகு மொருபாற்றிருவிடை
செங்கணரவும் பைங்கணுமையுங்
கேழற்கோடும் வீழ்திரளக்கு
நுடங்கநூலு யிடங்கொண்டுபுனைந்து
தவளநீறணிந்தோர் பவளவெற்பென்ன
வொளியுடன்றிகழு மொருபாலாகம்
வாரும்வடமி மேற்பெறப்புனைந்து
செஞ்சாந்தணிந்து குங்குமமெழுதிப்
பொற்றுமறையின் முற்றுமுகிழென
வுலகேழீன்று நிலையிற்றளரா
முலையுடன்பொலிப மொருபாலாக
மயில்வாளரவம் வயின்வயினணிந்து
மூவிலைவேனும் பூவாய்மழுவுந்
தமருகப்பறையு மமர்தரத்தாக்கிச்
சிறந்துளதொருபாற் றிருக்கரஞ்செறிந்த
சூட்கம்விளங்கிய வாட்டவக்கழங்குட
னெம்மென்பந்து மம்மென்கிள்ளையுந்
யிரித்தேதிகழு மொருபாற்றிருக்கர
மரவியுமெரியும் விரவியதெம்மையி
னொருபால்விளங்குந் திருநெடுநோட்ட

நவ்விமானின் செவ்வித்துத்தாகிப்
பாலிற்கிடந்த நீலம்போன்று
குண்டுநீர்க்குவளையிற் குளிர்ந்துகிரம்பயின்
றெம்மனோர்க்கடுத்த மம்மர்க்கிரங்கி
யுலகேழ்புரக்கு மொருபானாட்ட
னொச்சிப்பூவும் பச்சைமத்தமும்
கொன்றைப்போது மென்றுணர்த்தும்பையுங்
கங்கையாறும் பைங்கட்டலையும்
மராமதியமும் விரவித்தொடுத்துச்
சூடாமாலை சூடிப்பிடிகெழு
நெரிப்பிற்றிருத்தனைய வுறுக்கிளர்சடிலமொடு
நான்முகங்கரந்த பானிறவன்னங்
காணுவண்ணங் கருத்தையுங்கடந்து
சென்றுகந்துலதே யோருபாற்றிருமுடி
பேணிய
கடவுட்கற்பின் மடவரன்மகளிர்
கற்பகவனத்துப் பொற்பூவாங்கிக்
கைவைத்துப் புனைந்ததெய்வமாலை
நீலக்குழன்மிசை வளைஇமேனிவந்து
வண்டுதேனுங் கிண்டிபுதிளைப்பத்
திருவுடன்பொலியு மொருபாற்றிருமுடி
யினையவண்ணத்து நினைவருங்காட்டி
யிருவயினுருவு மொருவயிற்றாகி
வலப்பாணுட்ட மிடப்பானோக்க
வாணுதல்பாக நாணுதல்செய்ய
வலப்பாற்றிருக்கர மிடப்பால்வனமுலை
தைவந்துவருட மெய்ம்மயிர்பொடித்தாங்
குலகமேழும் பன்முறையீன்று
மருதிடங்கொண்ட வொருகனிக்கடவுளின்
றிருவடிபரவுதும் யாமோநெடுநா
ளிறந்தும்பிறந்து மிளைத்தனமறந்துஞ்
சிறைக்கருப்பா கயஞ்சேரா
மறித்தும்புகாஅவாழ்வு பெற்றேபொருட்டே (௧)

நேரிசைவெண்பா,

பொருளுங்குலனும் புகழுந்திறனு
மருளாமறியமனைத்து - மொருவர்
கருதரவென்பார்க் குதிகறைமிடற்றாய்தொல்லை
மருதரவென்பார்க்கு வரும்.

கட்டளைக்கலித்துறை

வருந்தேனிலந்தும் பிறந்துமயக்குப் புலன்வழிபோய்
பொருந்தேனரையிற் புகுன்றிலேன்புகழ் மாமருகிற்
பெருந்தேன்முகந்து கொண்டுண்டுபிறிதோன்றி லாசையின்றி
யிருந்தேனினிச்சென் றிரவேனொருவரை யாதொன்றுமே. (௩)

நேரிசையாசிரியப்பா

ஒன்றினோடொன்று சென்றுமுகிறடவி
யாடுகொதுடக்கும் பீடுகெழுமாளிகை
தெய்வக்கம்மியர் கைம்முயன்றுவகுத்த
வோவநூற்செம்மைப் பூவிபல்வீதி
குயிலெனமொழியு மயிலுயர்ச்சாயன்
மான்மாறவிழிக்கு மானார்செல்வத
திடைமருதிடங் கொண்டிருந்ததெந்தை
சுடர்மழுவலங்கொண் டிருந்ததொன்ற
லாரணந்தொடராப் பூரணாரண
நாரணனறியக் காரணக்கடவுள்
சோதிச்சுடரொளி யாதித்தனிப்பொரு
ளேகநாயக யோகநாயக
யானென்றுணர்த்து வதுளதேயன்முன்
னனந்தலையுகத் தனந்தயோனியிற்
பிறந்துழிப்பிறவாது கறங்கெனச்சுழன்றுழீஇத்
தோற்றும்பொழுதி னீற்றுத்துன்பத்
தியாயுறுதுயர முமியானுறுதுயரமு
மிறக்கும்பொழுதி னறப்பெருந்துன்பமு
நீயலதறிகு நாயாரேயதனு
லியானினிப்பிறத்த லாற்றேனஃதான
துற்பவந்துடைத்த னிற்பிடித்தல்லது
பிறிதொருநெறியி னில்லையந்நெறிக்கு

வேண்டலும்வெறுத்தலு மாண்டொன்றிற்படரா
வுள்ளமொன்றுடைமை வேண்டுமஃதன்றி
யைம்புலனே வலாணவழிநின்று
தானலதொன்றைத் தானெனநினையு
மிதுவெனதுள்ளமாத லினிதுகொடு
நின்னைநினைப்ப தெங்ஙனமுன்னங்
கற்புனையாகக் கடனீர்நீந்தின்
நெற்பிறருள ரோவினைவகற்பங்
கடத்தில்யான்பெறவும் வேண்டும்கடத்தற்கு
நினைத்தல்யான்பெறவும் வேண்டுநினைத்தற்கு
நெஞ்சிநெறிநிற்கவும் வேண்டுநஞ்சுபொதி
யுறையெயிற்றுரகம்பூண்ட
கறைகெழுமிடற்றெங் கண்ணுதலோயே (ச)

நேரிசைவெண்பா.

கண்ணென்றுநந்தமக்கோர் காப்பென்றுங்கற்றிருக்கு
மெண்ணென்றுமூல வெழுத்தென்று மொண்ணே
மருதவப்பாவென்று முனைவாளத்தாரேன்மற்றிங்
கருதவப்பாலுண்டோகதி. (ரு)

கட்டளைக்கலித்துறை.

கதியாவதுபிறிதியாதொன்று மில்லைகளேபரத்தின்
பொதியாவதுசுமந்தான் விழப்போமிதுபோனபின்னர்
விதியாமெனச்சிலர் நோவதல்லாலிதைவேண்டுநர்யார்
மதியாவதுமருதன்கழலே சென்றுவாழ்த்துவதே. (சு)

இணைக்குறளாசிரியப்பா

வாழ்ந்தன்மென்று தாழ்ந்தவர்க்குதவாது
தன்னுயிர்க்கிரங்கி மன்னுயிர்க்கிரங்கா
துண்டிப்பொருட்டார் கண்டனவெஃதி
யவியநுநர்க்குச்சுவைபலபகர்ந்தே
யாராவுண்டி யயின்றனராகித்
தூராக்குழியைத் தூர்த்துப்பாரா
விழுப்பமுங்குலனு மொழுக்கமுங்கல்வியுந்
தன்னிற்சிறந்தநன் மூதாளரைக்
கூஉய்யமுன்னின்று தன்னேவல்கேட்குந்

சிறுஅர்த்தொகுதியினுறு அப்பேசியும்
பொய்யொடுபுன்மைதன் புல்லர்க்குப்புகன்று
மெய்யுமாணமு மேன்மையமொரீஇத்
தன்னைத்தேறிமுன்னை யோர்கொடுத்த
நன்மனைக்கிழத்தி யாகியவன்னிலைச்
சாவுழிச்சா அந்தகையளாயினு
மேவுழிமேவல்சொல்லாதுகாவலொடு
கொண்டோளொருத்தியுண்டிவேட்டிருப்ப
வெள்ளுக்கெண்ணெய்போலத்தள்ளாது
பொருளினளவைக்குப்போகம்விற்றுண்ணு
மருளினமடந்தையராகந்தோய்ந்து
மாற்றல்செல்லாதுவேற்றோர்மனைவயிற்
கற்புடைமடந்தையர் பொற்புநனிகேட்டு
பிழைவழிபாராதுநுழைவழிநோக்கையு
நச்சிவந்தநல்கூர்மாந்தர்தம்
விச்சையிற்படைத்தவெவ்வேறுகாட்சியி
னகமலர்தீவார்போலமுகமலர்
தினிதுமொழிந்தாங்குதவுதலின்றி
நாளுநாருநாள் பகலகழித்தவர்
தாளினுற்றலுந்தவிர்த்துக்கேளிகழ்
திகழும்பரமுமில்லையென்று
பயமின்றெழுதிப்பட்டிமைபயிற்றி
மின்னினனையதன்செல்லத்தைவிரும்பித்
தன்னையுமொரு வராகவுன்னு
மெனையோவாழ்வும் வாழ்க்கையுநணைமலர்ந்
தியோசனைகமழுகர்முற்பலவாயிற்
பரசடைபரப்பிற் பானியுவன்னம்
பார்ப்புடன்வெருவப் பகுவாய்வாளைகள்
போர்த்தொழில்புரியும் பொருகாவிரியு
மருதமுஞ்சூழ்ந்த மருதவாண
சுருதியுந்தொடராச் சுருதிநாயக
பத்தருக்கெய்ப்பினில் வைப்பெனவுதவு
முத்திதாள மூவாமுதல்வனின்
திருவடிபிடித்து வெருவரல்விட்டு
மக்களுமனைவியு மொக்கலுந்திருவும்

பொருளெனநினையா துன்னருளினைநினைந்
திந்திரஞ்செல்வமு மெட்டுச்சித்தியும்
வந்துழிவந்துழி மருந்தனென்றொதுங்கிச்
சின்னஞ்சீரா துன்னற்கோவண
மறுதற்கீளொடு பெருவதுபுனைந்து
சிதவலோடொன்று தவுழியெடுத்தாங்
கிடுகிவோருளனொனி னிலையினின்றயின்று
படுதரைப்பாயலிற் பள்ளிமேவி
யோவாத்ததவெனு மரிவையைத்தழீஇ
மகவெனப்பல்லுயி ரனைத்தையுமொக்கப்
பார்க்குநின்
செல்வக்கடவுட் டொண்டர்வாழ்வும்
பற்றிப்பார்க்கி னுற்றனுயேற்குக்
குளப்படிநீறு மளப்பருந்தன்மைப்
பிரளயச்சலதியு மிருவகைப்பொருளு
மொப்பினுமெவ் வார்த்துப்பிற்றுதலி
னின்சீரடியார் தஞ்சீரடியார்க்
கடிமைபூண்டு நெடுநாட்பழகி
காற்றலையேவலென் னுய்த்தலையேற்றுக்
கண்டதுகாணி னல்லதொன்
றுண்டோமற்றெனக் குள்ளதுபிறிதே

நேரிசைவெண்பா.

பிறிந்தேனகம் பிறவாதவண்ண
மறிந்தேனனங்கவேளம்பிற்-செறிந்த
பொருதவட்டவிற்பிழைத்துப் போந்தேன்புராணன்
மருதவட்டந்தன்னுள்ளேவந்து (அ)

கட்டளைக்கலித்துறை.

வந்திக்கண்டாயடியாரைக் கண்டான்மறவாதுநெஞ்சே
சிந்திக்கண்டாயரன்செம்பொற் கழறிருமாமருதைச்
சந்திக்கண்டாயில்லையாயினமன் லமர்தாங்கொடுபோ
யுந்திக்கண்டாம்நிரயத் துன்னைவீழ்த்தியுழக்குவரோ (கூ)

இணைக்குறளாசிரிப்பா.

உழப்பின்வாரா வுறுதிகளுளவோ
கழப்பின்வாராக் கையறவுளவோ
அதனால்
நெஞ்சைப்புனத்து வஞ்சக்கட்டையை
வேரறவகழ்ந்துபோக்கித்தூர்வைசெய்
தன்பென்பாத்தி கோலிமுன்புற
மெய்யெனுமெருவை விரித்தாங்கையமில்
பத்தித்தனிவித் திட்டுநித்தலு
மார்வத்தெண்ணீர் பாய்ச்சிநேர்நின்று
தடுக்குநர்க்கடங்கா திடுக்கண்செய்யும்
பட்டியஞ்சினுக் கஞ்சியுட்சென்று
சாந்தவேலி கோலிவாய்ந்தபின்
ஞானப்பெறுமுளை நந்தாதுமுளைத்துக்
கருணையிளந்தளிர் காட்டவருகாக்
காமக்குரோதக் களையறக்களைந்து
சேமப்படுத்துழிச் செம்மையினோங்கி
மெய்ம்மயிர்புளக முகிழ்த்திட்டம்மௌனக்
கண்ணீரரும்பிக் கடிமலர்மலர்ந்து
புண்ணிய
வஞ்செழுத்தருங்காய் தோன்றிநஞ்சுபொதி
காளகண்டமுங் கண்ணொருமூன்றுந்
தோளிருநான்குஞ் சுடர்முகமைந்தும்
பவளநிறம்பெற்றுத் தவளநீறுபூசி
யறுசுவையதனினு முறுசுவையுடைத்தாய்க்
காணினுங்கேட்பினுங் கருதினுங்களிதருஞ்
சேணுயர்மருதபாணிக்கத்தீங்கனி
பையப்பையப் பழுத்துக்கைவர
வெம்மனோர்களி னிதினிதருந்திச்
செம்மாந்திருப்பச் சிலரிதின்வாராது
மனமெனும்புனத்தை வறும்பாழாக்கிக்
காமக்காடுமூடித் தீமைசெய்
பைம்புலவேட ராறலைத்தொருக்
வின்பம்போய்த்தே ரொட்டதோடக்
கல்லாவுணர்வெனும் புல்வாயலமர

திருமணம்புணர்ந்த ஞான்றுபெருமனின்
றுதவிழ்கொன்றைத் தாருயமதமில்
வீரவெள்விடைக் கொடியும்போரிற்
றழங்குந்தமருகப் பறையுமுழங்கொலித்
தெய்வக்கங்கை யாறும்பொய்தீர்
* விரையாக்கலி யெனுமாணையுநிரைநிரை
யாயிரம்வகுத்தமாயிருமருப்பின்
வெண்ணிறைச்செங்கண் வேழமும்பண்ணியல்
வைதிகப்புரவியும் வானநாடு
மையறுகனக மேருமால்வரையுஞ்
செய்பவறில்லை யாகியதொல்பெரும்
பதியுமென்
றொருபதினாயிரந் திருநெடுநாமமு
முரிமையிற்பாடித் திருமணப்பந்தரு
ளமரர்முன்புகுந்தறுகு சாத்திநின்
றமர்பெயரெழுதிய வரிநெடும்புத்தகத்
தென்னையுமெழுத வேண்டுவநின்னரு
ளாணைவைப்பிற்காணொணாவணுவும்
வானுறநிமிர்ந்துகாட்டுங்
கானில்வானுளம் புங்கருடனுதலினே. (ச)

வெண்பா.

ஆதரித்தமாலுமறிந்தில னென்றஃதறிந்தே
காதலித்தநாயேற்குங்காட்டுமே-போதகத்தோற்
கம்பலத்தானீணாககங்கணத்தான்றென்புலியூ
ரம்பலத்தான்செம்பொனடி. (ரு)

கலித்துறை.

அடியொன்றுபாதலமேழிற்கு மப்புறம்பட்டதின்பான்
முடியொன்றிவ்வண்டங்களெல்லாங் கடந்ததுமுற்றும்வெள்ளைப்

---

* கலியென்பதை விகுதிகுன்றிய முதனிலைத்தொழிற் பெயராக்கிப் பொய்தீர் விரையாக்கலியென் பதனுக்குவேதம், என்றுபொருள் கொள்க அதுவேயவனதாணையாதலை, வேதந்தானே நமதாணைச்சத்தி வடிவாய் என்னும்புராணக் கூற்றானுமுணர்க இதனுக்குச் சத்தியமெனப்பொருள் கூறுவாருமுளர்.

பொடியொன்றுதோளெட்டுத்திக்கின் புறத்தனபூங்கரும்பின்
செடியொன்றுதில்லைச்சிற்றம் பலத்தான்றன்றிருநடமே. (சு)

கழிநெடில்விருத்தம்.

நடமாடியேழுலகுமுய்யக்கொண்ட நாயகரோநான்மறையோர் தங்களோடுந், திடமாடமதிட்டில்லைக் கோயில்கொண்டசெல்வரோயுமத ருமைதோராவிட்டீ, ரிடமாடியிருந்தவளும் விலக்காவிட்டா லென் போல்வார்க்குடனிற்க வியல்வதன்று, தடமாலைமுடிசாய்த்துப்பணிந் தவானோர் * தஞ்சுண்டாயங்கருதிநஞ்சுண்டீரே. (எ)

நேரிசையாசிரியப்பா.

நஞ்சமிழ்பகுவாய் வெஞ்சினமாசுணந்
தன்முதன்முருக்கனென் முதற்சூழ்ந்த
நீர்ச்சிறுபாம்பு தன்வாய்க்கெதிர்வந்த
தேரையைவவ்வியாங்கியான்முன்
கருவிடைவந்தவொருநாட்டொடங்கி
மறவாமறலிமுறை பிறழ்பேழ்வா
யயிற்றலையன்ன வெயிற்றிடைக்கிடந்தாங்
கருணனியின்றியொரு வயிறேம்பற்குப்
பல்லுயிர்செகுத்து வல்லுதினருந்தி
கோயில்நான்மணிமாலை
யயர்த்தனனிருந்தும் போலும்பெயர்த்துநின்
றெண்டோள்வீசிக் கண்டோருருகத்
தொல்லெயிலுடுத்ததில்லைமூது
ராடுமம்பலக் கூத்தனைப்
பாடுதல்பரவுதல் பணிதலோவிலமே. (அ)

வெண்பா.

இலவிதழ்வாய்வீழ்வாரிகழ்வாரவர்தங்
கலவிகடைக்கணித்துங்காணே னிலகுமொளி
யாடகஞ்சேரம்பலத்தே யாளுடையார்நின்றாடு
நாடகங்கண்டன்பானநான். (கூ)

கலித்துறை.

நானேபிறந்துபயன்படைத் தேனயனாரணனெங்
கோனேயெனத்தில்லையம்பலத்தேநின்றுகூத்துகந்த

* தஞ்சமென்றபாலது - தஞ்செனக்குறைந்து நின்றது.

தேனே திருவுள்ளமாகியென் றீமை யெல்லாமறுத்துத்
தானேபுகுந்தடியேன்மனதேவந்து சந்திக்கவே. (௰)

கழிநெடில்விருத்தம்.

சந்துபுனையவெதும்பிமலரணை தங்கவெருவியிலங்குகலையொடு
சங்குகழலநிறைந்தவயலவர் தஞ்சொனலியமெலிந்துகிளியொடு
பந்துகழல்கண்மறந்துதளிர்புரைபண்டைநிறமுமிறந்துநிறையொடு
பண்புதவிரவனங்கனவனொடு நண்புபெருகவிளைந்தவினையன
நந்திமுழவுதங்கமலைபெறு நங்கைமகிழவணிந்தவரவுக
ணஞ்சுபிழியமுரன்று முயல்களைந்துநரலவலைந்தபகிரதி
யந்திமதியொடணிந்துதிலைநகரம்பொனணியுமரங்கினடநவி [மே
லங்கணரசையடைந்துதொழுதிவளன்றுமுதலெதிரின்றுவளையு

நிலமண்டிலவாசிரியப்பா.

வரைபொன்றுநிறுவியர வொன்றுபிணித்துக்
கடறடவாகமிடலொடும்வாங்கித்
திண்டோளாண்டதண்டாவமரர்க்
கமிர்துணுவளித்தமுதுபெருங்கடவுள்
கடையுகஞ்சென்றகாலத்துநெடுநில
மாழிப்பரப்பிலாள்வதுபொருஅ
தஞ்சேலென்றுசெஞ்சேலாகித்தன்
றெய்வவுதரத்துச்சிறுசெலுப்புறையிற்
பௌவமேழேபட்டதுபௌவத்தோ
டுளகுகுழைத்தொருநாளுண்டது
முலகமூன்றுமளந்துழியாங்கவ
னீரடிநிரம்பிற்றுமிலவேதேரி
னுணைப்போர்க்கல்லதவன்குறைவின்றே
யினையனாகியதனிமுதல்வானவன்
கேழற்றிருவுருவாகியாழத்
தடுக்கியவேழுமெடுத்தனனெடுத்தெடு
தாழியூழிகீழுலக்கிளைந்துங்
காண்பதற்கரியநின் கழலும்வேண்டியு
நிகிலலோகமு நெடுமறைத்தொகுதியு
மகிலசராசர மனைத்துமுதலிய
பொன்னிறக்கடவுளன்னமாகிக்
காண்டிலாதநின் கதிர்நெடுமுடியு

மீங்கிவைகொண்டுநீங்காதுவிரும்பிச்
சிறியபொதுவிந்த மறுவின்விளங்கி
யேவருககாணவாடுதிபதுவெனக்
கதிசயம்விளைக்குமன்றேயதிசயம்
விளையாதுமொழிந்த தெந்தைவளையாது
கல்லினும்வலிதது நல்லிதிற்செல்லாது
தான்சிறிதாயினு முள்ளிடைநிரம்ப
வான்பொயச்சமாயாவாசை
மிடைந்தனகிடைப்பவிடம் பெறலருமையி
லைவர்கள்வர் வல்லிதிற்புகுந்து
மண்மகன்றிகிரியிலெண்மடங்குசுற்ற
வாடுபுகிடந்த பேடிநெஞ்சத்து
நுழைந்தனைபுகுந்து தழைந்தநின்சடையுஞ்
செய்யவாயுமையமர்கண்டமு
நெற்றியிற்றிகழ்ந்த வொற்றைநாட்டமு
மெடுத்தபாதமுந் தடுத்தசெங்கையும்
புள்ளியாடையு மொள்ளிதின்விளங்க
நாடகமாடுதிநன்பகூடும்
வேதநான்கும்விழுப்பெருமுனிவரு
மாதிநின்றிற மாதலின்மொழிவது
பெரியதிற்பெரியை யென்றுமன்றே
சிறியதிற்சிறியை யென்றுமன்றே
நிறைபொருண்மறைகளுன்குநின்னறைகழ
லிரண்டொடுமருவினி லார்த்துவைத்த
மறையவர்தில்லைமன்றுள் கிழவோனே. (யஉ)

வெண்பா.

கிழவருமாய்நோய்மூப்புக்கீழ்பட்டுக்காமத்
துழவரும்போயோயுமாகண்டோமொழிதெரிய
வாயினுலிப்போதேமன்றிநடமாடு
நாயனுரொன்றுரைப்பேபாநாம். (யங)

கலித்துறை

நாமத்தினுலென் றனுத்திருத்தேனணிமாமலர்சேர்
தாமத்தினுலுன் சரண்பணியேன்சார்வதென்கொடுநான்

வாமத்திலேயொரு மானைத்தரித்தொரு மானைவைத்தாய்
சேமத்தினுலுன் திருத்தில்லைசேர்வதோர் செந்நெறியே. (௰௪)

கழிநெடில்விருத்தம்.

நெறிதருகுழலையறலென்பர்களிழலெழுமதியநுதலென்பர்க
ணிலவினும்வெளிதுநகை யென்பர்கணிறம்வருகலசமுலையென்பர்க
ளறிகுவதரிதிவிடையென்பார்களடியிணைகமலமாலன்பர்க
ளவயவமினையமடமங்கைய ரழகியுரமையுமவனொன்செய
மறிமழுவுடையகரனென்கிலர் மறலியைமுனியுமரனென்கிலர்
மதிபொதிசடிலதரனென்கிலர் மலைமகண்மருவுபயனென்கிலர்
செறிபொழினிலவுதில்லையென்கிலர் திருநடநவிலுமிறையென்கிலர்
சிவகதியருளுமறசென்கிலர் சிலர்நரகுறுவறறிவின்றியே. (௰௫)

நேரிசையாசிரியப்பா.

அறிவிலொழுக்கமும் பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையு மிடும்பையீட்டமு
மினையனபலசரக் கேற்றிவினையெனுந்
தொன்மீகாமனுய்ப் பவந்நிலைங்
கருவெனுநெடுநகரொருதுறைநீத்தத்துப்
புலனெனுங்கோண்மீ னலமந்துதொடரப்
பிறப்பெனும்பெருங்கடலுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திறையுவட்டிற் பெயர்ப்பிடமயர்த்துக்
குடும்பமென்னு நெடுங்கடல்வீழ்த்து
நிறையெனுங்கூம்புமுரிந்துகுறையா
வுணர்வெனுநெடும்பாய் கீறிப்புணரு
மாயப்பெயர்ப்படு காயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழா முன்னமலங்கன்
மதியுடனணிந்த பொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்த தெய்வநாயக
தொல்லையிலுடுத்த தில்லைகாவல
வம்பலர்தும்பை யம்பலவாணநின்
னருளெனுநலத்தார்பூட்டித்
திருவடிநெடுங்கரை சேர்த்துமாசெய்யே. (௰௬)

வெண்பா.

செய்யதிருமேனிச்சிற்றம்பலவருக்கென்
றையல்வளை கொடுத்தல்சாலுமே யையன்றேர்

சேயேவருமளவிற் சிந்தாதமாத்திரமே
தாயேநமதுகையிற்சங்கு. (௰௭)

கலித்துறை.

சங்கிடத்தானிடத்தான்றனதாகச் சமைந்தொருத்தி
யங்கிடத்தாடில்லை யம்பலக்கூத்தற் கவிர்சடைமேற்
கொங்கிடத்தார்மலர்க்கொன்றையொன்றுயெங்கைநீயுமொரு
பங்கிடத்தான்வல்லையேவில்லையேயுன்பசப்பொழியே. (௰௮)

கழிநெடில்விருத்தம்.

ஒழிந்ததெங்களுறவென்கொலோ வெரியிலொன்னலார்கள்புர முன்னோர்நாள், விழுந்தெரிந்துதுகளாக வென்றிசெய்தவில்லி தில்லிநகர்போலியார், சுழுந்தவுந்தியிலழுந்திமேகலை தொடக்கநின்றவர்நடக்கநொந், தழிந்தசிந்தையினும் வந்ததாகிலுமொர் சிந்தையாமொளிவதல்லவே. (௰௯)

நேரிசையாசிரியப்பா.

அல்லல்வாழ்க்கைவல்லிதிற்செலுத்தற்குக்
கைத்தொருழுந்துகார்வருமென்று
வித்துவிதைத்தும்விண்பார்த்திருந்தும்
கிளையுடன்றவிரப்பொருளுடன்கொண்டு
முளைமுதிர்பருவத்துப்பதியென்வழங்கியு
மருளாவயவரம்பிடைநடந்து
மிருளுறுபல்வத்*தேந்திரங்கடாஅய்த்
துன்றுதிரைப்பரப்பிற்குன்றுபார்த்தியங்கியு
மாற்றல்வேந்தற்குச்சோற்றுக்கடன்பூண்டு
தாளுழந்தோடியும் வாளுழந்துண்டு
மறியாவொருவனைச்செறிவந்துதெருட்டியுன்
சொற்பலபுனைந்துங்கற்றனகழறியுங்
குடும்பப்பாசநெடுந்தொடாப்பூசி
யையவரைந்திடத்தீர்ப்பநொய்திற
பிறந்தாங்கிறந்துமிறந்தாங்குபிறந்துங்
கணத்திடத்தோன்றிக்கணத்திடைக்கரக்குங்
கொப்புட்செய்கையொப்பின்மின்பேர்
துலப்பில்யோனிக்கலந்துமயங்கியு
நொய்யெரிவளர்த்துப்பெய்முகில்பெயருந்

* எந்திரம்-எ-து-கப்பல்

கடவுட்கண்ணு தனடமுயன்றெடுத்த
பாதப்பொதுப்பாய்புலிப்பட்டு
மீதியாத்தசைத்தவெள்ளையிற்றரவுஞ்
சேயுயரகலத்தாயிரங்குடுமி
மணிகிடந்திமைக்குமொருபேராரமு
மருள்பொதிந்தலர்ந்ததிருவாய்மலரு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமுங்
கங்கைவழங்குந்திங்கள்வேணியுங்
கண்ணிடைப்பொறுத்துமனத்திடையழுத்தியாங்
குண்மகிழ்ந்துரைக்கவுறுதவஞ்செய்தன
னான்முகன்பதத்தின்மேனிகழ்பதந்தா
னுறுதற்கரியதுமுண்டோ
பெறுதற்கரியதோற்பேறுபெற்றேற்கே (உ௰)

வெண்பா.

பெற்றோர்பிடிக்கப் பிழைத்துச்செவியாகள்
சுற்றோடவோடித்தொழர்நிற்கு-மொற்றைக்கைம்
மாமறுகச்சீரியசிற்றம்பலத் தான்மான்றேர்போங்
கோமறுகிற்பேதைக்குழாம். (உக)

கலித்துறை.

பேதையெங்கேயினித் தேறியுய்வாள் பிரமன்றனக்குத்
தாதைதன்றாதையென்றேத் தும்பிரான்றண்புலிசைப்பிரான்
*கோதைமந்தாமத்தன்கொன்றைகொடாநின்றுகொல்லவெண்ணி
யூதையுங்காருந்துளியொடுங்கூடியுலாவியவே. (உஉ)

கழிநெடில்விருத்தம்.

உலவுசலதிவாழ்விடமமரர்தொழவுணவெ
னுகருமொருவருழியினிறுதியொருராழிள
புலவுகமழ்கரோடிகையுடையபுனிதர்பூசுரற்
புலிசையலர்செய்போதணி பொழிலினிழலின்வாழ்வதோர்
கலவமயிலனார்சுருள்கரியகுழலினார்குயில்
கருதுமொழியினார்கடைநெடியவிழியினாரித
ழிலவிலழகியாரிடைகொடியின்வடிவினார்வடி
வெழுதுமருமையாரொனதிதயமுழுதுமாள்வரோ. (உ௩)

* கோதையந்த.
மந்த கொன்றை என்பதூஉம்பாடம் (கரோடிகை-எது தலைமாலை)

தெய்வவேதியர்தில்லைமூது
ராடகப்பொதுவிஞடகநவிற்றுங்

இணைக்குறளாசிரியப்பா.

ஆளெனப்புதிதின்வந்தடைந்திலமத்தநின்
றாளிணைவறலையினியற்றி
வழிவழிவந்தமரபினமொழிவது
னைந்தெழுத்தவையெனுசிந்தைபிற்கிடத்தி
னனவேபோலநாடோறும்பழகிங்
கனவிலுநவிற்றுங்காதலேம்வினைகெடக்
கேட்பதுநின்பெருங்கீர்த்திமீட்பது
நின்னெறிபல்லாப்புன்னெறிபடர்ந்த
மதியினெஞ்சத்தைவரைந்துநிதியென
வருத்திசெய்துடுவதுருத்திடுவதுன்
காலையுமாலையுங்கால்பெயர்த்திடுவதுன்
ஞலயம்வலம்வருவதற்கேசால்பினிற்
கைகொடுகுயிற்றுவதையநின்னது
கோயிற்பலபணிகுறிந்தேயோயா
துருகிநின்னினைந்தருவிசோரக்
கண்ணிற்காண்பதெவ்வுலகினுங்காண்பன
வெல்லா
நீயேயாகிநின்றதோர்நிலையே
நாயேன்றலைகொடுசார்வதுன்சரண்வழியல்லா
லலைகடல்பிறழினுமடாதேயதனுற்
பொய்த்தவவேடர்கைத்தகப்படுத்தற்கு
வஞ்சச்சொல்லின்வார்வலைபோக்கிச்
சமயப்படுகுழிசமைத்தாங்கமைலயின்
மானிடமாக்களைவளியப்புகுத்து
மாறுவிரதத்தகப்படுத்தாழ்த்து
விளைவுணர்வெனக்குவருமோவுளர்தரு

துரையுந்திரையு * நெர்ப்புறுகொட்பும்
வரையில்சீகரவாரியுங்குரைகடற்
பெருத்துஞ்சிறுத்தும்பிறங்குவதோன்றி
யெண்ணிலவாகி யிருங்கடலடங்குந்
தன்மைபோலச்சராசரமனைத்து
நின்னிடைத்தோன்றிநின்னிடையடங்குநீ
யொன்றினுந்தோன்றாயொன்றினுமடங்காய்
வானோர்க்கரியாய் மறைகளுக்கெட்டாய்
நான்மறையாளர்நடுவுள்புக்கடங்கிச்
செம்பொற்றில்லைமூதூ
ரம்பலத்தாடுமும்பர்நாயகனே (உச)

வெண்பா.

நாயனையவென்னைப்பொருட்படுத்திநன்களித்துத்
தாயனையனுயருளுந்தம்பிரான்-றூயவிரை
மென்றுழாய்மாலொடயன்றேடவியன்றில்லை
மன்றுளேயாடுமணி (உரு)

கலித்துறை.

மணிவாய்முகிழ்ப்பத்திருமுகம் வேர்ப்பவம்மன்றுக்கெல்லா
மணியாயருண்டமாடும் பிரானையடைந்துருகிப்
பணியாய்புலன்வழிபோ நெஞ்சமேயினிப்பையப்பையப்
பிணியாய்க்கடைவழிசாதியெல்லோரும்பிணமென்னவே. (உசு)

கழிநெடில்விருத்தம்.

என்னுமினிமடவரலாய்செய்குவதினமாய்வண்டுகெண்மலர்கிண்டித்
தென்னுவெனமுரல்பொழில் சூழ்தில்லையுள்ளூரதிருமுடியணிதாமந்
தன்னாலல்லதுதீராதென்னிடர்தகையாதுயிர்கருமுகிலேறி
மின்னுகின்றது துளிவாடையும் வரவீசாநின்றதுபேசாயே (உஎ)

இணைக்குறளாசிரியப்பா.

பேசுவாழிபேசுவாழி
யாசையொடுமயங்கிமாசுறுமனமே

* நொப்பு - எ-து - தடை.

# ரு அ பட்டணத்துப்பிள்ளையார்புராணம்.

பேசுவாழி பேசுவாழி
கண்டனமறையு முண்டனமலமாம்
பூசினமாசாம் புணர்ந்தனபிரியு
நிறைந்தனகுறையுமுயர்ந்தனபணியும்
பிறந்தனவிறக்கும் பெரியனசிறுக்கு
மொன்றென்றொருவழி நில்லாவன்றியுஞ்
செல்வமொடுபிறந்தோர் தேசொடுதிகழ்ந்தோர்
கல்வியிற்சிறந்தோர் கடுந்திறன்மிகுந்தோர்
கொடையிற்பொலிந்தோர் படையிற்பயின்றோர்
குலத்தினுயர்ந்தோர் நலத்தினின்வந்தோ
ரனையவொங்குலத்தின ரிறந்தோரனையவர்
பேருநின்றில போலுந்தேரி
னீயுமஃதறிதியன்றேமாயப்
போய்த்தேர்போன்று நீப்பருமுறக்கத்துக்
கனவேபோன்று நனவுபெயர்பெற்ற
மாயவாழ்க்கையைமதித்துக்காயத்தைக்
கல்லினும்வலிதாக் கருதிப்பொல்லாத்
தன்மையரிழிவுசார்ந்தனைநீயு
நன்மையிற்றிரிந்த புன்மையையாதலி
னழுக்குடைப்புலன்வழி யிழுக்கத்தினொழுகி
வளைவாய்த்தூண்டிலினுள்ளிரைவிழுங்கும்
பன்மீன்போலவு
மின்னுபுவிளக்கத்து விட்டில்போலவு
மாசையாம்பரிசத் தியானைபோலவு
மோசையின்விளிந்த புள்ளுப்போலவும்
வீசியமணத்தின் வண்டுபோலவு
முறுவதுணராச் செறுவுழிச்சேர்ந்தனை
நுண்ணூனூற்றுத்தன்னகப்படுக்கு
மறிவில்கீடத்து நுந்துழிபோல
வாசைச்சங்கிலிப் பாசத்தொடர்ப்பட்
டிடர்கெழுமனத்தினே டியற்றுவதறியாது
குடர்கொழூசிறையறைக் குறங்குபுகிடத்தி
கறவைநினைந்த கன்றெனவிறங்கி
மறவாமனத்து மாசறுமடியார்க்
கருள்சுரந்தளிக்கு மற்புதக்கூத்தனை

மறையவர்தில்லை மன்றுளாடு
மிறையவனென்கிலையென்னினைந்தனையே. (உஅ)

(வெண்பா.)

நினையார்மெலியார்நிறையழியார்வாளாப்
புனைவார்க்குக்கொன்றைபொதுவோ-வனைவீரு
மெச்சியேகாணவியன்றில்லையானருளென்
பிச்சியேநாளைப்பெறும். (உகூ)

(கலித்துறை.)

பெறுகின்றவெண்ணிலி தாயரும்பேறுறும்யாறுமென்னை
யுறுகின்றதுன்பங்களாயிரகோடியுமோய்வொடுஞ்சென்
றிறுகின்றநாள்களுமாகிக்கிடந்தவிடுக்கணெல்லா
மறுகின்றனதில்லையாளுடையான்செம்பொனம்பலத்தே. (௩0)

(கழிநெடில்விருத்தம்.)

அம்பலவரங்கணரடைந்தவர்தமக்கே
யன்புடையரொன்னுமிதெனுனையையுரித்துக்
அம்பலமுவந்தருளுவீர்மதனன்வேவக்
கண்டருளுவீர்பெரியகாதலறியாதே
வம்பலர்நிறைந்துவசை பேசவொருமாடே
வாடையுயிரீரமணிமாமையுமிழந்தென்
கொம்பலமருந்தகைமைகண்டுதகவின்றிக்
கொன்றையருளீர்கொடியிரொன்றருளுவீரோ. (௩க)

(இனைக்குறளாசிரியப்பா.

அருளுவாழி யருளுவாழி
புரிசடைக்கடவுளருளுவாழி
தோன்றுழித்தோன்றிநிலைதவக்கறங்கும்
புற்புதச்செவ்வியின்மக்களியாக்கைக்கு
நினைப்பினுங்கடிதே யிளமைநீக்க
மதனினுங்கடிதேமூப்பின்றொடர்ச்சி
யதனினுங்கடிதேகதுமெனமரணம்
* வாணாள்பருகியுடம்பைவறிதாக்கி
நாணாள்பயின்றநல்காக்கூற்ற
மினையதன்மையதிதுவேயிதனை

* வாழ்நாள் - வாணாளெனமரீஇயது.

யெனதெனக்கருதியிதற்கென்றுதொடங்கிச்
செய்தனசில்வேசெய்வனசிலவே
செய்யாநிற்பனசிலவேசெய்வனசிலவே
நன்றென்பசிலவேதீதென்பசிலவே
யொன்றினும்படாதனசிலவேயென்றிவை
கணத்திடைநினைந்துகளிப்பவுங்கலுழ்பவுங்
கணக்கில்கோடித்தொகுதியவைதா
மொன்றொன்றுணர்வுழி வருமோவனைத்து
மொன்றாவுணர்வுழி வருமோவென்றொன்று
தெளிவுழித்தேறல்செல்லேமளிய
மனத்தின்செய்கை மற்றிதுவேநீயே
யரியைசாலவெம் பெருமதெரிவுறி
னுண்டாய்த்தோன்று வயாவையுநீயே
கண்டனையவைநினைக் காணுவதுதா
னின்வயின்மறைத்தோ யல்லையுன்னை
மாயாய்மன்னினைநீயேவாழி
மன்னியுஞ்சிறுமையிற் கரந்தோயல்லை
பெருமையிற்பெரியோய் பெயர்த்துநீயே
பெருகியுஞ்சேணிடை நின்றோயல்லை
தேர்வோர்க்குத்தம்மினுமணியைநீயே
நண்ணியுமிடையொன்றின் மறைந்தோயல்லை
யிடையிட்டுநின்னைமறைப்பதுமில்லை
மறைப்பினுமதுவு
நீயேயாகிநின்றதோர்நிலையே
அஃதான்று
நினைப்பருங்காட்சி நின்னிலையிதுவே
நினைப்புறுங்காட்சி யெந்நிலையதுவே
யினிநனியிரப்பதொன் றுடையமனமருண்டு
புன்மையினினைத்துப் புலன்வழிபட்டினு
நின்யிவநினைந்தே மாகுதனின்வயி
னினைக்குமாநினைக்கப் பெறுதலனைத்தொன்று
நீயேயருளல்லெனவேண்டும்வேய்முதிர்
கயிலைபுல்லெனவெறி விசும்புவறிதாக
விம்பருய்யவம்பலம்பொலியத்

திருவளர்தில்லைமூதூ
ரருநடங்குயிற்றுமாதிவானவனே (௩௨)

வெண்பா.

வானோர்பணியமணியாசனத்திருக்கு
மானதசெல்வத்தரசன்றே-மானகம்
பந்திப்பார்நின்றாடும் பைம்பொன்னினம்பலத்தே
வந்திப்பார்வேண்டாதவாழ்வு (௩௩)

கலித்துறை.

வாழ்வாகவுந்தங்கள்வைப்பாகவு மறையோர்வணங்க
வாள்வாய்திருத்தில்லையம்பலத்தாயுன்னையன்றியொன்றைத்
தாழ்வாரொறிவார்கடனஞ்சை யுண்டிலையாகிலன்றே
மாள்வார்சிலரையன்றோதெய்வமாகவணங்குவதே (௩௪)

கழிநெடில்விருத்தம்.

வணங்குமிடையீர்வறிது வல்லியிடையாண்மேன்
மாரசரமாரிபொழி யப்பெறுமனத்தோ
டுணங்கியிவடானுமெலி யப்பெறுமிடர்க்கே
யூதையெறிதூவியுல வப்பெறுமடுத்தே
பிணங்கியரவோடுசடை யாடநடமாடும்
பித்தரொனவும்மிதய மித்தனையுமோரீ
ரணங்குவெறியாடுமறி யாடுமதுவீரு
மையலையுமல்லலையு மல்லதறியீரோ. (௩௫)

நேரிசையாசிரியப்பா.

ஈரவேரித்தார் வழங்குசடிலத்துக்
குதிகொள்கங்கை மதியின்மீதசைய
வண்டியங்குவளைப்பி னெண்டோட்செல்வ
வொருபாற்றோடுமொருபாற்குழையு
மிருபாற்பட்ட மேனியெந்தை
யொல்லொலிப்பழனத்தில்லைமூதூ
ராடகப்பொதுவி னாடகநவிற்று
மிமையாநாட்டத் தொருபெருங்கடவுள்
வானவர்வணங்குந் தாதையானே
மதுமழைபொழியும் புதுமந்தாரத்துத்
தேனியங்கொருசிறைக் கானசத்தியற்றிய

தெய்வமண்டபத் தைவகையமளிச்
சிங்கஞ்சுமப்ப வேறிமங்கைய
ரிமையாநாட்டத் தமையாநோக்கத்
தம்மார்புபருகச் செம்மாந்திருக்கு
மானச்செல்வத்து வானோரின்ப
மதுவேயெய்தினு மெய்துக்கதுமெனத்
தெறுசொலாளருறுசினந்திருகி
யெற்றியுமீர்த்துங் குற்றங்கொளீஇ
யீர்ந்தும்போழ்ந்து மெற்றுபுகுடைந்தும்
வார்ந்துங்குறைத்து மதநாய்கதீன்றும்
செக்குரற்பெய்துந் தீநீர்வாக்கியும்
புழுக்குடையழுவத்தழுக்கியல்சேற்றுப்
பன்னெடுங்காலமழுத்தியின்று
வரையிறண்டத்து மாறுக்கடுந்துயர்
நிரையஞ்சேரினுஞ் சேர்கவுரையிடை
யேனோரென்னையானுதுவிரும்பி
நல்லனெனினு மென்கவவரோ
யல்லனெனினு மென்கதில்லா
திருவொடுதிளைத்துப் பெருவளஞ்சிதையா
தின்பத்தழுந்தினு மழுந்துகவல்லாத்
துன்பந்துதைபினுந் துதைகமுன்பி
லிளமையொடுபழகிக் கழிமுப்புக்குறுகா
தென்றுமிருக்கினு மிருக்கவன்றி
யின்றேயிறக்கினு மிறக்கவொன்றினும்
வேண்டலுமிலனே வெறுத்தலுமிலனே
யாண்டகைக்குரிசினின்னடியரொடுங்குழீஇத்
தெய்வக்கூத்துநின் செய்யபாதமு
மடையவுமணுகவும்பெற்ற
கிடையாச்செல்வங்கிடைத்தலானே (௩௬)

வெண்பா.

ஆனேறேபோந்தாலழிவுண்டேயன்புடைய
நானேதான்வாழ்ந்திடினுநன்றன்றே-வானோங்கு
வாமாண்பொழிற்றில்லைமன்றைப்பெலிவித்த
காமானையித்தெருவேகொண்டு. (௩௭)

கலித்துறை.

கொண்டல்வண்ணத்தவனும் முகனிந்திரன்கோமகுடத்
தண்டர்மிண்டித்தெழுமம்பலக் கூத்தனுக்கன்புசெய்யா
மிண்டர்மிண்டித்திரிவாரெனக் கென்னினிநானவன்றன்
றொண்டர்தொண்டர்க்குத் தொழும்பாய்த்திரியத்தொடங்கினனே ()

கழிநெடில்விருத்தம்.

தொடாநகைத்தங்க முன்புளவாயின
தொழில்கண்மறுத்தொன்று மொன்றியிடாதொரு
சுளிவுதலைக்கொண்டுபுன்புலைவாரிக
டுளையொழுகக்கண்டு சிந்தனையோய்வொடு
நடைகெடமுற்கொண்ட பெண்டிர்பொருவொரு
நடலைநடைக்சென்று வந்தனபேசிட
நலியிருமற்கஞ்சி யுண்டிவெருவிழு
நரகவுடற்கன்பு கொண்டலைவேனினி
மிடலொடியப்பண் டிலங்கையர்கோனொரு
விரலினமுக்குண்டு பண்பலபாடிய
விரகுசெவிக்கொண்டு முன்புளதாகிய
வெகுளிதவிர்த்தன்று பொன்றியிடாவகை
திடமருள்வைக்குஞ் செழுஞ்சுடருறிய
தெளியமுதத்தின் கொழுஞ்சுவைநீடிய
தில்லைநகரிற்செம்பொ னம்பலமேவிய
சிவனைநினைக்குந் தவஞ்சதுராவதே (௩௬)

(நேரிசையாசிரியப்பா.)

சதுர்முகன்றந்தைக்குக் கதிர்விடுகடவு
ளாழிகொடுத்த பேரருள்போற்றி
முயற்சியொடுபணிந்த வியக்கர்கோனுக்கு
மாநிதியிரண்டு மாறுப்பெருவளத்
தளகையொன்று தளர்வின்றிநிறுவிய
செல்வங்கொடுத்த செல்வம்போற்றி
தாணிழலடைந்த மாணிக்காக
நாண்முறைபிறழாது கோண்முறைவலித்துப்
பதைத்துவருங்கூற்றைப் படிமிசைத்தெறிக்க
வுதைத்துயிரளித்த வுதவிபோற்றி

குலைகுலைகுலைந்த நிலையாத்தேவர்
படுபேரவல மிடையின்றிவிலக்கிக்
கடல்விடமருந்தின கருணைபோற்றி
தவிராச்சீற்றத் தவுணர்மூவெயி
லொல்லனல்கொளுவி யொருநொடிபொடிபட
வில்லொன்றுவளைத்த வீரம்போற்றி
பூமென்கரும்பொடு பொடிபடநிலத்துக்
காமனைப்பார்த்த கண்ணுதல்போற்றி
தெய்வயாளிகை முயன்றுகிழித்தென
கரியொன்றுரித்த பெருவிறல்போற்றி
பண்டுபெரும்போர்ப் பார்த்தனுக்காகக்
கொண்டுநடந்த கோலம்போற்றி
விற்பதமொன்றில் வெள்ளிமலையெடுத்த
வரக்கனைநெரித்த வாண்மைபோற்றி
விலங்கல்விண்டு விழுந்தெனமுன்னாட்
சலந்தரற்றடிந்த தண்டம்போற்றி
தாதையையெறிந்த வேதியச்சிறுவற்குப்
பரிகலங்கொடுத்த திருவுளம்போற்றி
நின்முதல்வழிபடத் தன்மகற்றடிந்த
தொண்டர்மனையி லுண்டல்போற்றி
வெண்ணெயுண்ண வெண்ணுபுவந்து
நந்தாவிளக்கை நுந்துபுபெயர்த்த
தாவுபுல்லெலிக்கு மூவுலகாள
நொய்தினிலளித்த கைவளம்போற்றி
பொங்குளையழல்வாய்ப் புகைவிழியொருதனிச்
சிங்கங்கொன்ற சேவகம்போற்றி
வரிமிடற்றெறுழ் வலிமணியுகுபகுவா
யுரகம்பூண்ட வொப்பனைபோற்றி
கங்கையுங்கடுக்கையுங் கலந்துழியொருபாற்
றிங்கள்சூடிய செஞ்சடைபோற்றி
கடவுளிருவ ரடியுமுடியுங்
காண்டல்வேண்டக் கனற்பிழம்பாகி
நீண்டுநின்ற நீளம்போற்றி
யாலம்பில்குநின் சூலம்போற்றி
கூறுதற்கரிய நின்னேறுபோற்றி

கடற்பாற்றிகழ்ந்தசடைஞுழற் கன்னிவனத்தெம்பெருமானை
யுடற்பாளினிமேனிறவறியாருல வாச்செல்வம்பெறப்பணிந்து
மடற்பாற்கமலம்வழிபிரசம் வாவிச்செழுநீர்மேன்மிதந்து
விடற்பாலனவாந்திருவதிகை வியன்மாநகரத்தயல்போந்தார். (௩௧)

கூற்றாயினவாறென்றெடுத்துக் கொழுந்தமிழான்வழுத்துமவர்க்
காற்றாவின்பந்திருநாவுக் கரசென்றளித்தாரொளித்தாள்கள்
போற்றாவணங்கிமணங் கமழும்பொற்பூவனையதமிழ்ப்பனுவ
லேற்றாநின்றார்மரகதவீ ரட்டானத்தெம்மிறைவனையே. (௩௨)

இறைவாழ்மூலவிலிக்கவடியிறைஞ்சிப் போந்தங்கிடைஞாழன்
மறையார்சோலைத்திருவெண்ணெய் நல்லூருடையவிடையானை
யுறவாடினர்தாமுறவாடியொன்று மிருடீர்ந்தருள்பெற்றார்
பிறையார்மின்னற்பின்னலராப் பேணிப்பணிந்தாபெரியோரே (௩௩)

சோலைகாட்டுங்கணைப்பெண்ணைத் துறையார்மறையார்சுந்தரனை
மாலைகாட்டுந்தமையிமையோர் மகிழ்ந்துகாணமுறியூசி
யோலைகாட்டியாண்டானையோவாவிடைபெற்றேகையினா
லாலைகாட்டும்பெருந்துழனி யண்ணாமலையைநண்ணுவரால் (௩௪)

நெடுந்தூரத்தேவன்னிமலை நிலையைநோக்கிப்பணிந்தெழுந்து
தடந்தாமரைத்தாணிணைந் துருகிச்சந்தம்பெருகுந்தமிழ்வாயார்
நடந்தாரந்ததொண்டர்பத நளினம்புளகம்பெறப்போற்றி
வடந்தாழ்முலையாளொனுங் கொழும்பால்வாரிமுழங்குமவ்வூரோ. (௩௫)

ஊருட்புகுந்துவீதிதொறு முள்ளங்குளிரவொளிவளரப்
பாருட்பணிந்துதிணிந்த மதிற்பயில்கோபுரவாயிலும்பணிந்து
வேருட்பழுத்தமலர்க்கனியை விண்ணாட்டமுதைக்கண்ணளிகூர்
வாருற்றுண்ணாமுலையாளை மலைசூழ்போந்துவணங்கினரால். (௩௬)

தாழாக்கருணைவிடைகொடுபோய்த் தருக்கிப்பெருக்காற்றொழுததெ
வாழாநின்றதிருவிசைப்பாவள்ளலுள்ளங்கரைந்துருகிப் [ன
பாழாப்பயிலாத்தொழிலாற்றும் பராலயங்கள்பலபோற்றிச்
சூழாவருவாரிடைமருதிற் றோன்றுங்குருவையொருவாதார். (௩௭)

மற்றும்பதிகளாங்காங்குவணங் கிக்குணங்கொணீறணிந்த
சுற்றுஞ்சடைசார்க்கினியதமிழ்த் தொடைமாலைகளும்பலசாத்தி
யெற்றும்புனலும்பெரியோருமினம் பூவையரும்வனம்பூத்தாக்
கொற்றந்தரும்வேதாகமமுங் குழுமுங்காஞ்சிநகர்புகுவார். (௩௮)

வேறு.

மாயவளப்பொருடேடமா நீரிற்போய்வருவார்
நேயவளப்பொருடேட நீணிலத்தின்மேற்படர்வார்
தூயவனப்பெரியோர்வாழ் தொண்டைமண்டலத்துத்
தாயவளெப்போதுமுறைதண் காஞ்சித்தலத்தணைந்தார். (சுசு)

கச்சியாந்தலநலத்தைக் கண்டிரண்டுகைகூப்பி
யுச்சிவாளிளம்பளிங்கை யொத்துவளருத்தமனூர்
நச்சியாரணம்பாடி நாடியநற்றவங்காட்டும்
பச்சைநாயகிசிவந்த பாதநினைந்துட்புகுவார். (எ)

மெய்காட்டியாண்டருளும் வித்தகர்மாவடித்தேவர்
கைகாட்டுந்தொண்டரொலாங் காவிரிப்பூம்பட்டணத்து
ஊகாட்டும்பெரியோர்வந் தறைகின்றொன்றடைந்தார்
மொய்காட்டுமிவரவர்கண் முன்பணிந்தாரன்பாளர். (எக)

மாடநெடும்பொன்வீதி வண்ணமெலாங்கண்ணுவப்ப
நீடியநீரார்பணிந்து நீர்மழைகண்ணூற்பொழிந்து
கோடலுருவாக்காற் குணம்பாய்கொழுந்தமிழ்கள்
பாடினூர்நாடிப்பரநாதன் முன்பணிந்தார். (எஉ)

ஒன்றாகநின்றுருகி யோங்காரநீங்காம
ணின்றானையேன்றபினின் கோலமாயிருப்பக்
குன்றாவரமளிப்பா யென்றார்குறைவறியார்
வென்றாளுமம்பிகைவாழ் மெய்க்கோயில்புக்கணரால். (எங)

வேறு.

ஆருயிராமவையார் பெறுவீடுற
வாரநீலாவிய மாதவன்மாதவள்
சீருறைவாள்விழி சீருறைவாளரு
ளேருறவேருறவே யிவர்நின்றார். (எச)

செங்கழுநீர்மலர் மூன்றொருதீப
மங்கலர்நான்கொரு நான்கெரிதீப
மெங்கனுமைக்கென லாமிவையாவுஞ்
சங்கரனன்பர் தருக்கொடுகண்டார். (எரு)

தாயவணின்று தவம்புரிக்காலைக்
கோயில்குலாநிதி கொண்டமைகண்டார்

நாயகன்மேனிநலஞ் செய்தழும்பை
யேயவர்நாத்தெழும் பறமொழிந்தார். (௩௬)

கச்சிநகர்க்கடலக் கடற்றேன்றும்
பச்சமுதப்பறை யைப்பணிவுற்றார்
மைச்செறிகட்கடை வைத்தருள் வைத்தா
ளிச்சிறுமைக்கடல் வற்றிடுமென்றார். (௩௭)

என்றுவணங்கிவலங் கொடிவணங்கிக்
குன்றில்விளைந்த கொழுங்கனியுட்கொண்
டென்றுமிருங்களி யின்பகிரம்ப
மன்றிடந்தொழ வந்தவர்வந்தார். (௩௮)

வேறு.

திருவேகம்பமுடையார்க்குத் திகழ்ந்தந்தாதியொருமாலை, யிருபான்மெய்த்தொண்டென வெடுத்தால்யற் றேண்டறியேன் கைத்தொண்டு,புரிவாரதலுற்காற்றெண்டு புரியேநன்பான்பொய்த்தொண்டாய், வருவேனென்றார்மெய்நாட்டோர் நகைக்கவெனுமாலையுமிசைத்தார். (௩௯)

இசைத்தங்கிருப்பாரோரிரவி லெரிவந்துதரம்புகுந்தாற்போ
லொசிக்கும்பசிவந்தெழவயிரோ யூருண்டுறங்கனடந்தனகாண்
வசிக்குமவர்களனம்பகிரா ரளியாயென்றுவமுழத்திடவும்
பசிக்குந்தரமேலிடவிளக்குப் படுவீடொன்றிற்படர்ந்தனரால். (௪௰)

காயும்பசியாலருட்பெரியோர் கங்குல்யாமத்தெளியராய்
வாயுந்திரவாரங்கைகொட்டமனை வாழ்பவன்சற்றறியாம
லாயுங்காமக்கள்ளனெனவந்தோ வந்தோதீங்கிழைப்பத்
தீயோன்செயலையறிந்தங்கணயலா னொருவன்றெரிந்தணைந்தான்.

போற்றும்பெரியோரிவர்தமைநீபுடைத்தல்பொல்லாதெனவதனை
மாற்றிக்கொடுபோயுடற்றடவி மகில்பாலன்னங்கறிநறுநெய்
கோற்றேனிவைகள்கலந்தூட்டிக் குளிர்சாந்தணிந்துபணிந்துசெயல்
சாற்றியிடநீரவரவர்க்குத் தக்கதடைந்தீரொன்றார்பின். (௪௨)

பிரியாவரனைவிடைகொடுபோய்ப் பெருங்காளத்திமலைநோக்கி
வரியார்சுரும்பர்வரியிசைக்கு மலர்க்காவாலங்காட்டம்மைக்
குரியார்வணங்கிமணங்கமழுமுயர் பூங்கானநெடுஞ்சாரற்
பெரியோர்தலங்கள்புரிவனவுங் காண்பான்கருதிப்பெயர்ந்தணைந்தார்.

தொண்டர்திரண்டோடிப்பணிந்து தொழுதுவீதிச்சினகரத்தைக்
கண்டுவணங்கிக்கரங்கூப்பிக் கள்ளங்கொள்ளாவுள்ளத்தார்
மண்டும்பேரன்பெனவறியா வண்ணம்பயிலுங்கண்ணப்பர்
பண்டைபணியைநினைந்துருகிப் பல்காலொல்கிப்பணிந்தனரால்.
பணிந்துதிருக்காளத்திமலைப்பரஞ் சோதியையும்பணிந்துபணிந்
தணிந்துபரஞ்சோதித்திருநின்றன் பென்புருகுமின்பாளர்
திணிந்தபடிவக்கொடுமுடிக டிசைகடோறுமிசையுமவை
துணிந்துகருணைத்திறம்பெறுவார் சூழப்போந்தார்வாழ்வுறவே.
போதும்போதின்மணிநகரம் புடையிலாடலிசைநோக்கி
நாதர்க்கிடுதண்டைத்தீபநணியர் வாருங்கதிக்காளற்
கேகமில்லாவுறவேயோவென்பார் முன்போம்பலயானை
சிதமதியோன்விழாவினுக்குத் திருமின்படாப்போவென்பார். (ககசு)
ஐயன்றிருமேனியினடங்கு மத்தீயுறவோவெனநினைவா
ரெய்யுஞ்சிலைவேட்டுவர்திண்ணர்க் கெண்ணிமுறவோபண்ணமைந்த
செய்யகனிவாய்க்குறமகளிர் சிவஞ்சேர்கன்னிமார்நோவார்
துய்யசீரதமிழிசையோர்சுரும்பின்பாடலாமென்பார் (ககஎ)
தவமாற்றுமலாற்றுவர் தம்மைச்சிவகோசரியாரொன
றுவமானத்தானினைந்துருகி யொளிகூர்தென்றிசைக்கயிலைத்
தவமாமலையைச்சூழ்போந்து தொடர்ந்துபடர்ந்தத்தவத்தவரோ
தடவமாறியலாக்கதியளிக்குமையன்றிருமுன்னடைந்தனரால் (ககஅ)
குளிர்கூரருவித்தென்கயிலைக் கோமாற்கில்லுமெனப்பாடி
யொளியார்திருமுன்விடை கொடுபோயொற்றியூர்கைப்பற்றினராய்த்
தளியாலயங்கள்பலபோற்றித் தண்டாமறைக்காட்டொடுமாட
வெளிமாமலைகள்கலைஞான வேலைநிலவப்பதிபோந்தார். (ககசு)
அடியார்திரளவ்வயினேக்கி யடிகளடித்தாமரைப்போற்றி
விடியாவிருளைவிடிவிக்கும்வீதி மதிற்கோபுரம்பணிந்து
பொடியாடியவொண்டிருமேனிப்புனிதனுதனப்புகழ்பாடி
நடியாநிற்குநாதாந்தஞானப் பொருளைநணுகினரால். (கஉ0)
குருவாய்வந்தென்குறைதீர்ந்த குன்றேகுன்றக்கொழுமணியே
பெருவாழ்வாகியெனைக்கலந்து பிரியாதிருக்கும்பெருந்தேனே
யுருவாயருவாயுருவருவாயுமையாடியமூன்றையுமொருவி
வருவாய்தருவாயென்னுயிர்வாய் மருவாய்மருவாய்மருவாயே. (கஉக)
போற்றிபோற்றிநாயேனைப் பொருளாய்க்கொண்டவருள்போற்றி
யாற்றின்வலிகூர்முகங்கோடி யடக்குஞ்சடையாயடிபோற்றி

தேற்றிபிணியாயினுமுனைப்போற செய்வாய்மெய்வாயருள்போற்றி
நீற்றினுள்ளேபவளவொளி நிகழுந்திகழ்வேயருள்போற்றி.

என்றென்றருளின்றிறம்போற்றி யெள்ளாவுள்ளங்கனிந்திளைப்ப
மன்றுளாடியெமக்கருளுமணி மாணிக்கப்பதம்பணிந்து
நின்றுபோந்துவலஞ்சூழ்ந்து நிகழ்ந்துமகிழ்ந்தங்கிருக்கின்றார்
தென்றல்வந்துசுந்தரனைத்திருவாரூருக்கழைத்தவூர். (கஉரு)

மயனுலயனுவியற்றுதமணிச்சங்கி லிக்குத்தூதுபோய்
வியனுமிருகானடந்தார்க்கு விருந்தாய்வந்தவெண்காடர்
கயனுணியகட்கணிகையர் காற்கமலச்சிலம்பினொலிமலியும்
பயனுரொற்றியூர்பற்றிப் பதிகொண்டிருந்தார்படிபோற்ற. (கஉசு)

வேறு.

இருநிலமடத்தையென்ன மெடுத்தவாசிரியச்செய்யு
ளொருபதுமொன்று மொற்றியூர்த்தொகையெனப்பேரிட்ட
திருவிசைப்பாவாற்பாடித் தெளியொளிவுளம்விளங்கப்
பெருநிலையுடையாரின்பப் பேரொலாம்பெற்றுளாரே. (கஉரு)

பெற்றவர்திருநீராடித்திரு நீற்றின்பெற்றிமுற்றுங்
கற்றவர்புரங்கண்மூன்றுங் கற்றவர்கருத்துட்கொண்டு
செற்றவரடிகள்பாடித் தினந்தொறுநியமமாற்ற
லுற்றனருற்றவாற்றி னுண்மையிங்கியம்பலுற்றேன். (கஉசா)

நம்மிடைமருதநாத னற்குருவாகிவந்து
தம்பொருடனக்குத்தந்த தண்ணளிப்பெருமையாலே
யம்பொனஞ்செழுத்தினுலு மருநியமங்கள்செய்வார்
சம்புவையொழியாப்பூசைத் தன்மையுமற்றுற்செய்வார் (கஉஎ)

கிளர்ந்தகெற்பத்தினுள்ளுங் கெற்பகோளகையிடத்துங்
கொளுங்கெற்பநிலையத்துள்ளுங் கேவலஞ்சகலங்கூர
வளந்தறிசகலந்தாமேயதீதம்போன்றதீதமன்றும்
வளங்களுங்கண்டுநீங்கி மண்டொளிகொண்டுநிற்பார் (கஉஅ)

அவத்தைகடணந்தவன்றி யையனுக்காக்கையாக்கிச்
சிவத்தொழிலொவ்வெழுத்தாற் சிவலிங்கவடிவமாகிப்
பவப்பெறும்பிணிதணிப்பார் பரவுயிர்தமக்குளாக்கி
யவர்க்குளவுடலந்தாமே ராயினரொற்றியூரர். (கஉகூ)

அவருயிர்தமக்கில்லாக்கியாண்டவாண்டகையார்நிற்ப
வுவரிவாய்மணற்பரப்பி லொளிவெளியிடத்திற்போந்து

கவலுறுச்சிறுர்கள்சூழக் கண்டவர் தன்மையாகிப்
பவர்விளையாடலோடும் பாடலும்பயிலலுற்றுர். (கஙo)

குறுமகாரணிக்குழாங்கள் குளிர்மணப்புளினப்பாங்க
ருறுதிமெய்த்தளர்ந்துபின்ன ரொன்றும்வெண்காடர்தம்மை
மறுதரம்புதைத்துத்தொக்க வப்புறம்பரந்துநிற்பார்
மறுகுழிப்படுத்தழன்னு மன்னவர்விலகிநிற்பார். (கஙக)

பன்முறையித்தன்மைமைத்தாம் படிபடிமணலிற்காட்டி
முன்னியபட்டினத்து முனைத்தவலடிவந்தானே
சென்னெறியிலிங்கமாகிச் செழுமணறனின்முளைத்தார்
புன்னெறிச்சிறுர்களோடிப் புறத்துளார்க்குரைத்தாரன்றே. (கஙஉ)

ஒற்றியூருழியுள்ளாரு மற்றுளபுரியுளாரும்
பற்றியூர்ந்தடைந்துகண்டார் பட்டினக்கடவுளாரை
வெற்றியூர்மூன்றுஞ்செற்ற விமலரோயிவராமென்றுர்
பெற்றியூரதிசயத்தின் பெருமையாருறைசெய்வாரோ. (கஙங)

மலர்மழைபொழிந்தவெங்கும் வானதுந்துபிமுழங்க
நலமலிகணங்கள்சூழ நாகைநாட்டரம்பைமார்கள்
பலநடம்பயிலப்பூவிற் பாவைபாரடியர்பாட
விலகியவிதழிமாலை யீசனுக்கணிதாரன்றே. (கஙச)

புகுவார்வார்த்தைநாத்தகவாப்பு வனத்துள்ளுமந்தரத்து
மகிழுந்தேவருலகுள்ளு மணிநீர்வேலிஞாலத்துந்
தகுவோர்கேளர்விவர்பேறுந் தமக்குவருமோவெனக்களித்தார்
நகையாநீலப்புரமூன்றுமெரித்தார் பெருமைநவில்வார்யார். (கஙரு)

திருவம்பலமேமுதலாய சிவத்தானங்கள்பணிந்தனவு
மருவும்பொழுதுதிருவிசைப் பாவழுத்துந்திறமுமொற்றியூ
ரருளின்றிரத்தாற்சிவலிங்க மானவாறும்பூம்புகார்
விரவுங்குலத்தாரறிந்தோகை வெள்ளத்தழுந்தாமிதத்தெழுந்தார்.

அழுவார்தொழுவார்சென்னியின்மே லங்கைவைத்தஞ்சலிமுகிழ்ப்பா
வழுவாநமதுகுலத்தெய்வம் வருமோகாணவினியென்பார்
முழுவாண்மதியிங்கெழுந்தருளப் பெறுமோவென்னமொழிகின்றுர்
பொழுதோடிவண்விட்டவ்விடம்போய்ப்பணிவோமென்பார்புண்ணி
யரோ. (கஙஎ)

சொன்னவண்ணங்கிளைகளொடுந் துழனியார்ப்பவப்பதியோ
றன்னபெரியோர்யோனநெறி யவனிதலமேற்பலர்படர்வா

ரின்னவாற்றலொற்றியூரிடத்தி லடைந்தார்சிவபெருமான்
றன்னைப்பணிந்திச்சிவபெருமான் றனையும்பணியாநிற்கின்றார். ()

போற்றிபோற்றிநின்னிரண்டு பூமென்கமலபதம்போற்றி
தேற்றமருவும்பரநாதச் சிலம்புபோற்றிநலம்பயிலைன்
பேற்றவரியபுலியதனின்மருங்குல்போற்றிநெருங்கரவந்
தோற்றுமுதரபந்தமுந்திச் சுழியும்போற்றியெழில்போற்றி. (கங௯)

புரிநூன்மார்பும்வெண்ணீறும் புயமீரைந்தும்புடைபோற்றி
வரியாரரவம்வச்சிரம்வாண் மழுவோடபயம்வலம்போற்றி
யரவார்பாசக்கயிறுமணியனலங்குசத்தோளிடம்போற்றி
கரவாதிருக்குந்திருநீல கண்டம்போற்றியொளிபோற்றி. (கச0)

நடுவுகுணபாற்றென்றிக்கு நடக்கும்வடக்குக்கிழக்கிவற்கு
ணடைவுபடிகம்பொன்கருமை யாத்தம்பாலாமுகம்போற்றி
முடிவிலாதமுகங்கடொறு முக்கட்கமலபதம்போற்றி
சடையுமுடியும்பொன்னிதழித் தாமத்தொடையும்தனிபோற்றி. ()

சிவமென்றுயச்சதாசிவமைந்தாகித் தெளிவுகூர்வோர்க்குப்
பவமாற்றவருமதகேசமெனப்பரவு முருவத்தைந்தாகி
யவமாற்றியமெய்க்கடவுளுடனாகும் பொருளேயடிபோற்றி
கவலாதெம்மைக்காக்கவருங் கருணாநிதியேயடிபோற்றி. (கச௨)

என்றுபோற்றுமாபூசை யியற்றிப்பணிகள்பலபுரிந்து
மன்றல்கமழுமவ்வூரில் வரித்தார்சிலவரிவர்க்காக
நன்றிபெருகுமிஞ்சியிசை நகரமதனினிதமர்ந்தார்
குன்றாச்செல்வமிருமைக்கும் பெற்றார்சற்றுங்குறைவிலரே. (கச௩)

அருளாயிலிங்கமானவன்பர் தங்காதைகேட்போர்க்
கிருளருஞ்செல்வமல்குமென்று நன்னலங்கணண்ணும்
பெருமையுமறிவுமென்றும் பிறங்கியகதியுமாகுந்
திருமகள்கலைமகள்கைசேர்வதுந்திண்ணமாமே. (கசச)

பட்டணத்துப்பிள்ளையார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாந்திருமுறையுள் திருவெண்காடனொன்னும்

பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

முதலாவது

## கோயில்நான்மணிமாலை.

திருச்சிற்றம்பலம்.

வெண்பா.

பூமேலயனறியா மோலிப்புறத்ததே
நாமேபுகழ்ந்தளவை நாட்டுவோம்-பாமேவு
மேத்துகந்தான்றில்லை யிடத்துகந்தானம்பலத்தே
கூத்துகந்தான் கொற்றக்குடை.

(கலித்துறை)

குடைகொண்டிவ்வையமெலாங் குளிர்வித்தெரிபொற்றிகிரிப்
படைகொண்டிகலொறும் பார்த்திவராவதிற் பைம்பொற்கொன்றைத்
தொடைகொண்டவார்சடையம்பலத்தான் றொண்டர்க்கேவல்செய்து
கடைகொண்டபிச்சைகொண்டுண்டிங்குவாழ்தல் களிப்புடைத்தே.()

கழிநெடில்விருத்தம்.

களிவந்தமுதூறிக் கன்மனத்தையெல்லாங் கசியும்படிசெய்துக ண்டறிவாறில்லா, வெளிவந்தடியேன்மனம் புகுந்ததென்றாவ் விரிசடையும்வெண்ணீறுஞ் செவ்வானமென்ன, வொளிவந்தபொன்னிற முந் தொன்னடமுங்காட்டி முடையானுயர்தில்லை யம்பலமொன்றல்லா, வெளிவந்தினிப்பிறர் பாற்சென்றவர்க்குப் பொய்கொண் டிடைமிடைந்தபுன்மொழியாலிச்சை யுரையோமே. (௩)

இணைக்குறளாசிரியப்பா.

உரையின்வரையும் பொருளினளவு
மிருவகைப்பட்ட வெல்லையுங்கடந்து
தம்மைமறந்து நின்னைநினைப்பவர்
செம்மைமனத்தினுந் தில்லைமன்றினுநட
மாடும்பல வாணநீடு
குன்றக்கோமான்றன் றிருப்பாவையை
நீலமேனி மாதிருத்தங்கையை

விச்சைவித்துதிர்துழி யானெனப்பெயரிய
நச்சுமாமரநனி மிகமுளைத்துப்
பொய்யென்கவடுகள் போக்கிச்செய்யும்
பாவப்பஃறழை பரப்பிப்பூவெனக்
கொடுமையரும்பிக்கடுமைமலர்ந்து
துன்பப்பல்காய்தூக்கிப்பின்பு
மரணம்பழுத்து நரகிடைவீழ்ந்து
தமக்கும் பிறர்க்குமுதவா
திமைப்பிற்கழியு மியற்கையோருடைத்தே. (௰)

(நேரிசைவெண்பா.)

உடைமணியினோசைக் கொதுங்கியரவம்
படமொடுங்கப்பையவே சென்றங்-கிடைமருத
ராயம்புகுவ தனியிழையார்மேலனங்கன்
கையம்புகவேண்டிக் காண். (௰க)

(கட்டளைக்கலித்துறை)

காணீர்கதியொன்றுங் கல்லீரெழுத்தஞ்சும்வல்லவண்ணம்
பேணீர்திருப்பணி பேசீரன்புகழாசைப்பட்டு
பூணீருருத்திரசாதன நீறெங்கும் பூசுகிலீர்
வீணிரெளிதோமருதப்பிரான்கழன் மேவுதற்கே (௰உ)

இணைக்குறளாசிரியப்பா.

மேவியபுன்மயிர்த் தொகையோடம்மயிர்
பாவியதோலின் பரப்போதோலிடைப்
புகவிட்டுப்பொதிந்த புண்ணேபுண்ணிடை
யூறுமுதிரப் புனலோகூறுசெய்
திடையிடைநிற்கு மெலும்போவெலும்பிடை
முடைகெழுமூளை விழுதோவழுவழுத்
துள்ளிடையொழுகும் வழும்போமெள்ளநின்
றூரும்புழுவினொழுங்கோநீரிடை
வைத்தமலத்தின் குவையோவைத்துக்
கட்டியநரம்பின் கன்றோவுடம்பிற்குட்
பிரியாதொறுக்கும் பிணியோ*தெரியா
தின்னதியானென் றறியேனென்னை.

யெங்குந்தேடினன் யாதிலுங்காணேன்
முன்னம்
வரைதனிவில்லாற் புரத்தையலூட்டிக்
கண்படையாகக் காமனையொருநா
ணுண்பொறியாக நோக்கியண்டத்து
வீயாவமரர் வீயவந்தெழுந்த
தீவாய்நஞ்சைத் திருவமுதாக்கி
யிருவர்தேடி வெருவரநிமிர்ந்து
காலனுக்காகக் காலனைக்காய்ந்து
சந்தனசரள சண்பகவகுள
நந்தனவனத்திடை ஞாயிறுவழங்கா
நவமணிமுகிழ்த்த புதுவெயிலெறிப்ப
வெண்ணருங்கோடி யிருடிகணங்கட்குப்
புண்ணியம்புரக்கும் பொன்னிசூழ்ந்த
திருவிடைமருத பொருவிடைப்பாக
மங்கைபங்ககங்கைநாயகநின்
றெய்வத்திருவருள் கைவந்துகிடைத்தலின்
மாயப்படலங் கீறித்தூய
ஞானநாட்டம் பெற்றனன்பெற்றபின்
னின்பெருந்தன்மையுங் கண்டேன்காண்டலு
மென்னையுங்கண்டேன் பிறரையுங்கண்டே
னின்னிலையனைத்தினுங் கண்டேனென்னை
நின்னைக்காணு மாந்தர்
தன்னையுங்காணுத் தன்மையோரே. (௰௩)

(நேரிசைவெண்பா.)

ஓராதேயஞ்செழுத்து முன்னுதேபச்சிலையு
நேராதேநீரு நிரப்பாதே-யாராயோ
வெண்ணுவாருள்ளத் திடைமருதர்பொற்பாத
நண்ணுவாவென்னு மதுகாம். (௰௪)

(கட்டளைக்கலித்துறை)

நாமேயிடையுள்ளவாறறிவாமினு நாங்கள்சொல்ல
லாமேமருதன்மருவனத்தன்னமன்னவரைப்

* தெரிதரலெனவும்பாடம்.

பூமேலணிந்துபிழைக்கச்செய்தாரொருபொட்டுமிட்டார்
தாமேதளர்ப்பவரைப்பாதமேற்றுதறக்கதன்றே. (௰௫)

நேரிசையாசிரியப்பா

அன்றினர்புரங்க ளழலிடையவியக்
குன்றுவளைத்தெய்த குன்றாகக்கொன்றத்து
துண்பொடியணிந்த வெண்டோட்செல்வ
கயிலைநடந்தனைய வுயர்நிலைநோன்றாட்
பிறைசெறித்தன்ன விருகோட்டொருமிதிற்
பானிறச்செங்கண் மால்விடைப்பாக
சிமையச்செங்கோட் டியமச்செல்வன்
மணியெனப்பெற்ற வணிபியலன்னம்
வெள்ளைச்சிறுநகைக் கிள்ளைப்பிள்ளை
குயிலெனப்பேசு மயிலிளம்பேடை
கதிரொளிநீலங் கமலத்துமலர்ந்தன
மதரறிநெடுங்கண் மானின்கன்று
வருமுலைதாங்குந் திருமார்புவல்லி
வையமேழும் வன்முறையீன்ற
வையதிருவயிற் றம்மைபிராட்டி
மறப்பருஞ்செய்கை யறப்பருஞ்செல்வி
யெமையாளுடையை வுமையாணங்கை
கடவுட்கற்பின் மடவரல்கொழும்
பவளமால்வரைப் பனைக்கைபோன்றனைய
தழைசெவியெண்டோட் டலைவன்றந்தை
பூவலர்குடுமிச் சேவலம்பதாகை
மலைதுளபடுத்த கொலைகெழுகூர்வே
லமரர்தாங்குங் குமரன்றாதை
பொருந்திடங்கொண்ட பொன்னிபுரக்கு
மருதிடங்கொண்ட மருதவாண
நின்னதுகுற்ற முளதோனின்னைத்
தெண்ணறுங்கோடி யிடர்பகைகளைந்து
கண்ணிறுசீற்றத்துக் காலனைவதையா
சிறப்பையும்பிறப்பையு மிகழ்ந்துசிறப்பொடு
தேவராவின் கன்றெனத்திரியாப்
பாவிடமதே பாவம்யாதெனின்
முறியர்ப்பெருக்கண் முப்புழங்கலந்த
வருசுவையடிசி லட்டினிதிருப்பப்
புசி யாதொருவன் பசியால்வருந்துத

லயினின்குற்றமென்று வெயிலின்வைத
தாற்றியதெண்ணீர் நாற்றமிட்டிருப்ப
மடாஅலொருவன்விடாஅவேட்கை
மேதண்ணீர்குற்றமன்றுகண்ணகன்று
தேன்றுளிசிதறிப் பூந்துணர்துறுமி
வாலுகங்கிடந்த சோலைகிடப்ப
வெள்ளிடைவெயிலிற் புள்ளிவெயர்பொடிப்ப
வடிபெயர்த்திடு வானொருவ
னெடிதுவருந்துத னிழற்றீங்கன்றே

நேரிசைவெண்பா

அன்றென்றுமாமென் மாறுசமயங்க
ளொருவன்றொன்றெடவ்வா துணைத்தாலு மென்று
மொருதனையேநோக்குவா ருள்ளத்திருக்கு
மருதனையேநோக்கி வரும்

கட்டளைக்கலித்துறை

நோக்கிற்றுகாமனுடல் பொதியாகநுடிவிரலாற்
றாக்கிற்றரக்கன்றலைகீழ்ப்படத்தன் சுடாவடிவா
னோக்கிற்றுதக்கன்தலையுருண்டோடச்சலந்தரனைப்
போககிற்றுயிர்பொன்னிசூழ்மருதாளுடைப்புண்ணியமே

நேரிசையாசிரியப்பா

புண்ணியபுராதன் புதுப்பூங்கொன்றைக்
கண்ணிவேங்கை கைலைநாயக
காளகண்ட கந்தனைப்பயந்த
வாளரிநெடுங் கண்மலையாள்கொழுந
பூதநாத பொருவிடைப்பாக
வேதகீத விண்ணோர்தலைவ
முத்திநாயக மூவாமுதல்வ
பத்தியாகிப் பணைத்தமெய்யன்பொடு
நொச்சியானுக் கரந்தையாயினும்
பச்சிலையிட்டுப் பரவுந்தொண்டர்
கருவிடைபுகாமற் காத்தருள்புரியுந்
திருவிடைமருத திரிபுராந்தக
மலர்தலையுலகத்துப் பலபலமாக்கண்
மக்களைமனைவியை யொக்கலையோரீஇ

மனையும்பிறருந் துறந்துநினைவருங்
காடுமலையும் புக்குக்கொடையிற்
கைம்மேநிமிர்த்துக் காலொன்றுமுடக்கி
யைவகைநெருப்பினழுவத்துநின்று
மாரிநாலிலும் வார்பனிநாளிலு
நீரிடைமூழ்கி நெடிதுகிடந்தும்
சடையைப்புனைந்தும் தலையைப்பரித்து
முடையைத்துறந்து முண்ணுதுழன்றுங்
காயுங்கிழங்குங் காற்றுதிர்சருகும்
வாயுவுநீரும் வந்தனவருந்தியுங்
களரிலுங்கல்லினும் கண்படைகொண்டுந்
தளர்வுறுமியாக்கையைத் தளர்வித்தாங்கவ
ரம்மைமுத்தி யடைவதற்காகத்
தம்மைத்தாமே சாலவுமொறுப்பா
ரீங்கிவைசெய்யா தியாங்களெல்லாம்
பழுதின்றுயர்ந்த வெழுநிலைமாடத்துஞ்
செந்தாதுதிர்ந்த நந்தாவனத்துந்
தென்றலியங்கு முன்றிலகத்துந்
தண்டாச்சித்திர மண்டபமருங்கிலும்
பூவிரிதரங்க வாவிக்கரையிலு
மயிற்பெடையாலக் குயிற்றியகுன்றிலும்
வேண்டுழிவேண்டுழி யாண்டாண்டிட்ட
மருப்பினியன்ற வாளரிசுமந்த
விருப்புறுகட்டின் மீமிசைப்படுத்த
வைவகையமளி யணைமேற்பொங்கத்
தண்மலர்கமழும் வெண்மடிவிரித்துப்
பட்டினுட்பெய்த பதனுண்பஞ்சி
னெட்டணையருகாக் கொட்டைகள்பரப்பிப்
பாயன்மீது பரிபுரமிழற்றச்
சாயலன்னத்தின் றளர்நடைபயிற்றிய
பொற்றோரணத்தைச் சுற்றியதுகிலென
வம்மென்குரங்கி னும்மென்கலிங்கங்
கண்ணுமனமும் கவற்றிப்பண்வா
விரங்குமணிமே கலையொருங்குடன்கிடந்த
வாடரவல்குலம் பெறனுசுப்பு
வாடவீங்கிய வனமுலைகதிப்ப

வனியியல்கமுகையலங் கரித்ததுபோன்
வணியியலாரங் கதிர்விரித்தொளிர்தர
மணிவளை தாங்கு மணிகெழுமென்றோள்
விரித்தசாந்தி மிசைவிரித்திட்ட
வுரித்தயப்பட்டொரு பாலொளிதர
வள்ளைவாட்டிய வொள்ளிருகாதொடு
பவளத்தறுகாத்தரளநிரைத்தாங்
கொழுகிநீண்ட குமிழொன்றுபதித்துக்
காலன்வேலுங் காமபாணமு
மாலகாலமு மனைத்துமிட்டமைத்த
விரண்டுநாட்டமும் புரண்டுகடைகுளிர்தர
மதியெனமாசறு வதனம்விளங்கப்
புதுவிரையலங்கல் குழன்மிசைப்பொலியு
மஞ்சொன்மடந்தைய ராகந்தோய்ந்துஞ்
சின்னம்பரப்பிய பொன்னின்கலத்து
மருசுவையடிசில் வறிதிருந்தருந்தா
பாடினர்க்கென்றும் பாடினர்க்கென்றும்
வாடினர்க்கென்றும் வரையாதுகொடுத்துப்
பூசுவனபூசியும் புனைவனபுனைத்துந்
தூசிநல்லன தொடையிற்சேர்த்தியு
மைந்துபுலன்களு மாரவார்ந்து
மைந்தருமொக்கலு மனமகிழ்தோங்கி
யிவ்வகையிருந்தோ மாயினுமவ்வகை
மந்திரவெழுத்தைந்தும் வாயிடைமறவாது
சிந்தைநன்வழி செலுத்தலினந்த
முத்தியுமிழந்தில முதல்வவத்திற
நின்னதுபெருமை யன்றேவென்னெனின்
வல்லானொருவன் கைம் முயன்றெறியினு
மாட்டாவொருவன் வாளாவெறியினு
நிலத்தின்வழா அக்கல்லேபோ
லைத்தின்வாழார்நின்னு மனவின்றேரோ (௰௧)

(நேரிசைவெண்பா.)

நாமநவிற்றும்மனனே நாரியர்கடோடோய்ந்து
காமனவிற்றிக் கழிந்தொழிய-லாமோ
பொருதவனத்தானை யுரிபோர்த்தருளுமெங்கண்
மருதவனத்தானைவளைந்து. (௨௰)

கட்டளைக்கலித்துறை.

வளையார்பசியின்வருந்தார் பிணியின்மதனனம்புக்
கிளையார்தனங்கண் டிரங்கிநில்லாரிப்பிறப்பினில்வந்
தளையார்நரகினுக்கென்கடவார் பொன்னலர்ந்தகொன்றைத்
தளையாளிடைமருவு தன்னடியாரடிசார்ந்தவரே. (உக)

நேரிசையாசிரியப்பா

அடிசார்ந்தவர்க்கு முடியாவின்ப
நிறையக்கொடுப்பினுங் குறையாச்செல்வ
மூலமுநடுவு முடிவுமின்றிக்
காலம்மூன்றுங் கடந்தகடவு
ளுளக்கணுக்கல்லா தூண்கணுக்கொளித்துத்
துளக்கறநிமிர்ந்த சோதிச்சுடரொளி
யெறுப்புத்துளையி னிருசெவிக்கெட்டா
துறுப்பிநின்றெழுதரு முள்ளத்தோசை
வைத்தநாவின் வழிமறித்தகத்தே
தித்தித்தூறுந் தெய்வத்தேற
லுண்டத்துளையிற் பண்டைவழியன்றி
யறிவினறு நறியநாற்ற
மேனையதன்மையு மெய்தாதெவற்றையுந்
தானேயாகி நின்றதற்பரந்
தோற்றுவதெல்லாந் தன்னிடைத்தோற்றித்
தோற்றம்பிறிதிற் றோற்றாச்சுடர்முளை
விரிசடைமீமிசை வெண்மதிகிடப்பினு
மிருள்புரைகண்டத் தேகநாயக
சுரிதியமிருவருந் தொடர்ந்து நின்றலமா
மருதிடங்கொண்ட மருதமாணிக்க
வுமையாள்கொழுந வொழிமூன்றாகிய
விமையாநாட்டத் தென்றனிநாயக
வடியேனுறுகுறை முனியாதுகேண்மதி
நின்னடிபணியாக் கன்மனக்கயவரொடு
நெடுநாட்பழகிய கொடுவினையீர்ப்பக்
கருப்பாசயமெனு மிருட்சிறையறையிற்
குடரென்சங்கிலி பூண்டுதொடர்பட்டுக்
கூட்டுச்சிறைப்புழுவி னீட்டுமலத்தழுந்தி
யுடனேவருந்தி நெடுநாட்கிடந்தி

பல்பிணிபெயர்பெற்றல்லற்படுத்துந்
தண்டனாளர் மிண்டிவந்தலைப்ப
வுதரநெருப்பிற் பதைபதைபதைத்தும்
வாதமத்திகையின் மோதமொத்துண்டுக்
கிடத்தனிற்ற ணடத்தசெல்வா
திடங்குறைவாயிலின் முடங்கியிருந்துழிப்
பாவப்பகுதியு விட்டுக்காவற்
கொடியோராவரை யேவிநெடிய
வாசைத்தளையி லென்னையுமுடலையும்
பாசப்படுத்திப் பையெனவிட்டபின்
யானும்போந்து தீதினுக்குழன்று
பெரியோர்ப்பிழைத்தும் பிறர்பொருள்வெளவியு
பரியாதொழிந்தும் பல்லுயிர்செகுத்தும்
வேற்றோர்மனைவியர் தோற்றம்புகழ்ந்தும்
பொய்பலகூறியும் புல்லினம்புல்லியு
மைவருங்கடுப் பாவதுகூட்டி
வீண்டினகொண்டு மீண்டுவந்துழி
யிட்டுழியிடாது பட்டுருப்பட்டாஅ
தின்னாளுடுக்க ணெய்திப்பன்னாள்
வாடுபுகிடப்பேன் வீடுநெறிகாணே
னின்னையடைந்த வடியாரடியார்க்
கென்னையுமடிமை யாகக்கொண்டே
யிட்டபச்சிலை கொண்டோட்டியறிவித்
திச்சிறைபிழைப்பித் தினிச்சிறைபுகாமற்
காத்தருள்செய்யவேண்டுந்
தீத்திரண்டண்ண செஞ்சடையோனே (௨௨)

நேரிசைவெண்பா.

சடைமேலொருத்தி சமைந்திருப்பமேனிப்
புடைமேலொருத்திபொலிய-விடையேபோய்
சங்கேகலையே மருதற்குத்தான்கொடுப்ப
தெங்கேயிருக்கவிவள். (௨௩)

கட்டளைக்கலித்துறை.

இருக்குமருதினுக்குள்ளிமையோர்களுநான்மறையு
நெருக்குநெருக்கத்துநீளகத்துச்சென்றுமீளவொட்டாத்

திருக்குமருத்தைவர்தீமையுந் தீர்த்துச் செல்வேமனத்தை
யொருக்குமொருக்கத்தி னுள்ளேமுளைக்கின்றவெண்சுடரே.

(நேரிசையாசிரியப்பா.)

சுடர்விடுசூலப் படையினையென்றும்
விடையுகந்தேறிய விமலவென்று
முண்ணாநஞ்ச முண்டனையென்றுங்
கண்ணாற்காமனைக் காய்ந்தனையென்றுந்
திரிபுரமெரித்த சேவகனென்றுங்
கரியுரிபோர்த்த கடவுளென்று
முரகம்மண்ட வுரவோயென்றுஞ்
சிரகஞ்செந்தழ லேந்தினையென்றும்
வலந்தருகாலனை வதைத்தனையென்றுஞ்
சலந்தரனுடலந் தடிந்தனையென்று
மயன்சிறமொருநா ளரிந்தனையென்றும்
வியந்தவாளரக்கனை மிதித்தனையென்றுந்
தக்கன்வேள்வி தகர்த்தனையென்று
முக்கிரப்புலியுரி யுடுத்தனையென்று
மேனமுமன்னமு மெட்டாதலமர
வானங்கீழ்ப்பட வளர்ந்தனையென்றுஞ்
செழுநீர்ஞாலஞ் செகுத்துயிருண்ணு
மழல்விழிக்குற ளையமுக்கினையென்று
மினையனவினையனவெண்ணில்கோடி
நினைவருங்கீர்த்தி நின்வயிற்புகழ்த
றுளக்குறுசிந்தை யேன்சொல்லளவாதலி
னளப்பரும்பெருமை நின்னளவலதாயினு
மொன்றினேயாப் புன்மொழிகொண்டு
நின்னைநோக்குவ னாதலினென்னை
யிடுக்கண்களையா வல்லற்படுத்த
தெழுநிலமாடத்துச் செழுமுகிலுறங்க
வடித்துத்தட்டி யெழுப்புவபோல
நுண்டுகிற்பதாகை கொண்டுகொண்டுகைப்புத்
துயிலினீங்கிப் பயினும்வீங்கித்
திருமருதமர்ந்த செய்வச்செழுஞ்சுட

ரருள்சுரந்தளிக்கு மற்புதக்கூத்த
கல்லினெறிந்த பொல்லாப்புத்த
னின்னினைந்தெறிந்தவதனு
வன்னலன்றனக்கு மருள்பிழைத்தின்றே (உரு)

(நேரிசைவெண்பா)

இன்றிருந்துநாளையிறக்குந்தொழிலுடைய
புன்றலையமாக்கள் புகழ்வரோ-வென்றிமழு
வாளுடையான்றெய்வமருதுடையானாயேனை
யாளுடையான்செம்பொனடி (உசு)

(கட்டளைக்கலித்துறை)

அடியாயிரந்தொழிலாயிரவாயிரமாயிரம்பேர்
முடியாயிரங்கண்கண் மூவாயிரமுத்துநீறணிந்த
தொடியாயிரங்கொண்ட தோளிரண்டாயிரமென்றுநெஞ்சே
படியாயிராப்பகற்றென்மரு தாளியைப்பற்றிக்கோண்டே

(இணைக்குறளாசிரியப்பா)

கொண்டவனிருண்ட கண்டத்தொண்டோட்
செவ்வானுருவிற் பையரவார்த்துச்
சிறுபிறைகிடந்த நெறிதருபுன்சடை
மூவாமுதல்வ முக்கட்செல்வ
தேவதேவ திருவிடைமருத
மாசறுசிறப்பின் வானவராடும்
பூசத்தீர்த்தம் புரக்கும்பொன்னி
யயிராவணத்துறையாடுமப்ப
கைலாயவாண கௌரிநாயக
நின்னருன்சுரந்து பொன்னடிபணிந்து
பெரும்பதம்பிழை யாவரம்பலபெற்றோ
ரிமையாநெடுங்கணுமையாணங்கையு
மழைக்கட்டடத்துப் புழைக்கைபிள்ளையு
மமரர்த்தாங்குங் குமரவேளுஞ்
சுரிசங்கேந்திய திருநெடுமாலும்
வான்முறைபடைத்த நான்முகத்தொருவனுந்
தாருகற்செற்றவீரக்கன்னியும்
பூவின்கிழத்தியுநாவின் மடந்தையும்

பீடுயர்தோற்றதுக் கோடியுருத்திரு
மானப்பெருந்திரல் வானோர்தலைவனும்
செயிர்தீர்நார்கொட்டயிராவதமும்
வாம்பரியருக்கர்தாம்பன்னிருவருஞ்
சந்திரனொருவனும் செந்தீக்கடவுளு
நிறுதியுஞ்சமனும் சுருதிகநான்கும்
வருணனும்வாயுவு மிருநிதிக்கிழவனு
மெட்டுநாகமு மட்டவசுக்களு
மூன்றுகோடி யான்றமுனிவரும்
வசிட்டனுங்கபிலனு மகத்தியன்றானும்
தும்புருநாரத ரென்றிருதிருத்தரும்
வித்தகப்பாடன் முத்திரத்தடியுருந்
திருந்தியவன்பின் பெருந்துறைப்பிள்ளையு
மத்தகுசெல்வத் தவமதித்தருளிய
சித்தமார்சிவ வாக்கியதேவரும்
வெள்ளைநீறு மெய்யிற்கண்டு
கள்ளன்கையிற் கட்டவிழ்ப்பித்து
மோடும்பன்னறி யூளகேட்டரனைப்
பாடினவென்று படாம்பலவளித்துங்
குவளைபுனலிற்றவளையரற்ற
வீசன்றன்னை யேத்தினவென்று
காசும்பொன்னுங் கலந்துதூவியும்
வழிபடுமொருவன் மஞ்சனத்தியற்றிய
செழுவிரையெள்ளைத் தின்னக்கண்டு
பிடித்தலுமவனிப் பிறப்புக்கென்ன
விடித்துக்கொண்டவ னெச்சிலைநுகர்ந்து
மருதவட்டத் தொருதனிக்கிடந்த
தலையைக்கண்டு தலையுறவணங்கி
யும்மைப்போல வெம்மித்தலையுங்
கிடக்கவேண்டுமென் றடுத்தடுத்திரந்துங்
கோயின்முற்றத்து மீமிசைக்கிடப்ப
வாய்த்ததென்று நாய்க்கட்டமெடுத்துங்
காம்பழுத்துதிர்ந்த கனியுருக்கண்டு
வேம்புகட்கெல்லாம் விதானமளித்தும்
விரும்பினகொடுக்கை பரம்பரர்க்கென்று
புரிகுழற்றேவியைப் பரிவுடன்கொடுத்த

பெரியவன்பின் வரகுணதேவரு
மினையதன்மைய ரெண்ணிறந்தோர்க
ளனைவருநிற்க யானுமொருவன்
பத்தியென்பதோர் பாடுமின்றிச்
சுத்தனாயினுந் தோன்றாக்கடையே
னின்னை
யிறைஞ்சிலனாயினு மேத்திலனாயினும்
வருந்திலனாயினும் வாழ்த்திலனாயினுங்
கருதியிருப்பன் கண்டாய்பெரும
நின்னுலகனைத்து நன்மைதீமை
யானவை நின்செயலாதலி
னானேயமையு நலமில்வழிக்கே (உஅ)

நேரிசைவெண்பா.

வழிபிழைத்துநாமெல்லாம் வந்தவாசெய்து
பழிபிழைத்தபாவங்களெல்லாம்-பொழில்சூழ்
மருதிடத்தானென்றொருகால்வாய்கூப்பவேண்டா
கருதிடத்தாமில்லாக் கரந்து. (உகூ)

கட்டளைக்கலித்துறை.

கரத்தினன்மாலவன்கண்கொண்டு நின்கழல்போற்றனல்ல
வரத்தினையீயுமருதவப்பாமதி யொன்றுமில்லேன்
சிறத்தினுமாயென்றன் சிந்தையுளாகிவெண் காடனென்னுந்
தரத்தினுமாயதுநின்னடியாந் தெய்வத்தாமறையே. (௩0)

திருச்சிற்றம்பலம்.

திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

முற்றிற்று.

பதினொன்றாந்திருமுறையுள்

திருவெண்காடனென்னும்

# பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

மூன்றாவது திருக்கழுமல

# மும்மணிக்கோவை

திருச்சிற்றம்பலம்

இணைக்குறளாசிரியப்பா.

திருவளர்பவளப் பெருவரைமண்ணந்த
மரகதவல்லிபோ லொருகூறின்
இமயச்செல்வி பிரியாதுவிளங்கப்
பாய்திரைப்பறவை மீமிசைமுழ்கித்த
அலைகதிர்ப்பரிதியா யிரந்தொகுத்த
வரன்முறைதிரியாதுமலர் மிசையிருந்தெனக்
கதிர்விடுநின்முகங் காண்டொறும்காண்டொறும்
முதிராவிளமுலை முற்றாக்கொழுந்தின்
திருமுகத்தாமரைச் செல்வியின்மலரநின்
தையல்வாணுதற் றெய்வச்சிறுபிறை
இளநிலாக்காண்டொறுமொளியொடும்புணர்ந்தநின்
செவ்வாய்க்குமுதஞ் செவ்விசெய்யநின்
செங்கைக்கமல மங்கைவனமுலை
அமிர்தகலசமமைவினேந்த
மலைமகடனது நயனக்குவளைநின்
பொலிவினொடுமலரமறையோர்கழுமல
நெறிநின்றுபொலியநாகர்நாடு
மீமிசைமிதந்து மீமிசையுலகம்
கீழ்முதற்றாழ்ந்து
ஒன்றாவந்தகுன்றாவெள்ளத்
துலகமூன்றுக்குங்களைகணாகி
முதலில்காலமினிது வீற்றிருந்தழித்
தாதையோடுதந்த வேதியச்சிறுவன்
தளர்நடைப்பருவத்து வளாபசிவருத்த
அன்னையோவென்றழைப்பமுன்னின்று
ஞானபோனகத்தரு ளட்டிக்குழைந்த

ஆளுத்திரலை யவன்வயினருள
அந்தணன்முனிந்து தந்தாரியாரென
அவனைக்காட்டுவனப்பாவனூர்
தோலுடைய செவியனென்றும்
பீடுடையபெம்மானென்றும்
கையிற்சுட்டிக்காட்ட
ஐயநீவெளிப்பட்டருளினையோங்க (க)

(வெண்பா)

அருளின்கடலடியே னன்பென்னுமாறு
பொருளின்றிரள்புகலிநாதன்--இருள்புகுதுங்
கண்டத்தானென்பாரைக் காதலித்துக்கைதொழுவார்
அண்டத்தார்தாமாரதற்கு (உ)

(கட்டளைக்கலித்துறை.)

ஆரணநான்கிற்குமப் பாலவனறியத்துணிந்த
நாரணனான்முகனுக் கரியானடுவாய்நிறைந்த
பூரணனெந்தைபுகலிப்பிரான்பொழிலத்தனைக்குங்
காரணனந்தக்கரணங்கடந்தகருப்பொருளே (ங)

(இணைக்குறளாசிரியப்பா)

கருமுதற்றொடங்கிப் பெருநாளெல்லாம்
காமம்வெகுளிகழி பெரும்பொய்யெனும்
தூய்மையில்குப்பைதொடர்வின்றீற்கிடந்ததை
அரிதினிகழ்ந்து போக்கிப்பொருதிறன்
மையிருணிறத்து மதமுதையடுசினத்
தைவகைக்கடாவும் யாய்பவிழ்த்தகற்றி
அன்புகொடுமெழுகியருள்விளக்கேற்றித்
துன்பவிருளைத் துறந்துமுன்புற
மெய்யெனும்விதானம் விரித்துரெய்ய
கீழ்மையிற்றொடர்ந்து கிடந்தவென்சிந்தைப்
பாழறையினுக்குப் பள்ளியறையாக்கிச்
சிந்தைதாமரைச் செழுமலர்ப்பூந்தவி
செந்தைநீயிருக்க விட்டனணிநத
நெடுநிலவளாகமுமடு கதிர்வானமும்
அடையப்பரந்த வாதிவெள்ளத்து

றுறையெனச்சிதறி யிருசுடர்மிதப்ப
வறைபரித்திபங்கு மாருதங்கடுப்ப
மாலும்பிரமனு முதலியவானவர்
காலமிதுவெனக் கலங்காநின்றுழி
மற்றவருய்யப் பற்றியபுணையாய்
மிகநனிமிதந்தபுகலிநாயக
அருண்ணிசுரக்கும் புரளயவிடங்கநின்
செல்வச்சிலம்பு மெல்லெனமிழற்ற
அமையாக்காட்சியிமயக
கொழுந்தையுமுடனேகொண்டிங்
கெழுந்தருளத்தகு மெம்பெருமானே

வெண்பா.

மானுமழுவுந்திரு மிடற்றில்வாழுமிரு
தானும்பிறையுமேதாங்கிநிற்கும்-வானவற்கு
வெள்ளத்தேதோன்றிக் கழுமலத்தேவீற்றிருந்தேன்
உள்ளத்தேநின்றவொளி. (ரு)

(கட்டளைக்கலித்துறை.)

ஒளிவந்தாவாபொய்மனத்திருணீங்கவென்னுள்ளவெள்ளம்
தெளிவந்தவாவந்துதித்தித்த வாசிந்தியாத்தொரு
களிவந்தவாவன்புகைவந்த வாகடைசாரமையத்
தெளிவந்தவாநகங்கழு மலவாணர்தம்மின்னருளே. (சு)

(இணைக்குறளாசிரியப்பா.)

அருள்பழுத்தளிந்த கருணைவான்கனி
ஆராவின்பத்தீராக்காதல்
அடியவர்க்கமிர் தவாரிநெடுநிலை
மாடக்கோபுரத் தாடகக்குடுமி
மழைவயிறுகிழிக் குங்கழுமலவாணநின்
வழுவாக்காட்சி முதிராவிளமுலைப்
யாவையுடனிருந்த பரமயோகி
யானென்றுணர்த்துவ னெந்தைமேனாள்
அகிலலோகமு மனந்தயோனியும்
நிகிலமுந்தோன்ற நீநினைந்தநாடொடங்கி
எனைப்பலயோனியு நினைப்பரும்பேதத்

தியாரும்யாவையு மெனக்குத்தனித்தனித்
தாயாகியுந் தந்தையராகியும்
வந்திலாத வரில்லையானவர்
தந்தையாகியுந் தாயாராகியும்
வந்திராததுமில்லைமுந்து
பிறவாநிலனுமில்லையவ்வயின்
இறவாநிலனு மில்லைபிறிதில்
எனைத்தின்னுவுயிர்களு மில்லையானவை
தமைத்தின்று தொழிந்ததுமில்லையனைத்தே
காலமுஞ்சென்றதி யானிதன்மேலினி
இளைக்குமாறிலனேநாயேன்
அந்தரச்சோதிநின்னஞ்செழுத்துநவிலும்
தந்திரம்பயன்றது மிலனெதந்திரம்
பயின்றவர்ப்பயின்றது மிலனேயாயினும்
இயன்றதோர் பொழுதினிட்டதுமலராய்ச்
சொன்னதுமந்திரமாகவென்னையும்
இடர்பெறப்பெனுமிரண்டின்
கடற்படாவகைக்காத்தனின்கடனே. (எ)

வெண்பா.

கடலானகாமத்தே காழும்வர் துன்பம்
அடலாமுபாயமறியார்-உடலாம்
முழுமலத்தையோர்கிலார் முக்கட்பெருமான்
கழுமலத்தைக்கை தொழாவார். (அ)

(கட்டளைக்கலித்துறை)

தொழுவாரிவள்வளைதோற் பாளிவளிடர்க்கேயலர்கோண்
டெழுவாளெழுகின்றதென்செய வோவென்மனத்திருந்துங்
கழுவாமணியைக்கழுமலவாணனைக்கையினிற்கொள்
மழுவாளனைக்கண்டுவந்ததென்றாலோர்வசையில்லையே (கூ)

(இணைக்குறளாசிரியப்பா)

வசையில்காட்சியிசைநதிவிளங்க
முன்னுணிகழ்ந்த பன்னிருகத்து
வேறுவேறு பெயரியனூறின்றியன்ற
மையறுசிறப்பிற்றெவ் வத்தன்மைப்
புகலிநாயகவியல் விடைப்பாக

அமைநாண்மென் றேருமையாள்கெழு
குன்றுகுனிவித்து வன்றேளவுணர்
மூவெயிலெரித்த சேவகத்தேவ
இளநிலாமுகிழ்க்கும்வளர்ச் சடைகடவுணின்
நெற்றியிற்சிறந்த வொற்றைநாட்டத்துக்
காமனைவிழிந்தமாமுதுதலைவை
வானவரறியாவரதியானே
கல்லாவுடம்பிற் புல்லறிவுதொடர
மறந்துநோக்கும் வெறுந்துதண்ணுட்டத்துக்
காண்டறுங்காண்டொறு மெல்லாண்டப
யாயினும்பிறவுமென்னத்தும்பிறாதும்
ஆவனபலவுமாழிவனபலவும்
போவதும்வருவது நிகழ்வதுமாகித்
தெண்ணீர்ஞாலத்துத் திரண்டமணலினும்
எண்ணில்கோடி யெனப்பலவாகி
இல்லனவுளவா யுள்ளனகாணுப்
பன்ளிருள்வயிற் பட்டேனன்னதும்
அன்னதாதலி னடுக்குமதன்னெனின்
கட்புலென்றெரியாது கொட்புறுமொருவற்குக்
குழிவழியாகி வழிகுழியாகி
ஒழிவின்றுன்றி னென்றுதடுமாறி
வந்தாற்போல வந்ததும்போல
எந்தைநின்
திருவளர்நாட்டுங் கருணையிற்பெறலும்
யாவையுமெனக்குப் பொய்யெனத்தோன்றி
மேவருநீயே மெய்யெனத்தோன்றினே
ஓவியப்புலவன் சாயல்பெறவெழுதிய
சிற்பவிகற்ப மெல்லாமொன்றில்
தவிராது தடவினர்தமக்குச்
சுவராய்த்தோன்றுந் துணிவுபோன்றனவே (ய)

வெண்பா.

எனவேயெழுந்தாளென் செய்கிறபாளின்னம்
சினவேறுகாட்டுதிர்ன்னு - மினுவேகப்

பாம்புகலியாகிகுரு பன்னுச்சடைமுடிநம்
பூம்புகலியானிதழிப் போது. (யக)

(கட்டளைக் கலித்துறை.)

போதும்பெருவிடில்பச்சிலையுன்றி புனலுண்டெங்கும்
ஏதும்பெருவிடினெஞ்சுண்டின்றேயினை யாகச்செப்பும்
சூதும்பெருமுலைப்பங்கர்தென்றோணி யுரசேர்வண்டின்
தாதும்பெருதவடித்தாமரைசென்று சார்வதற்கே. (யஉ)

திருச்சிற்றம்பலம்.

# மும்மணிக்கோவை

முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவெண்காடரென்னும்

பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

நான்காவது

# திருவொற்றியூர்த்

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஆசிரியப்பா

இருநிலமடந்தை யியல்பினினுடுத்த
பொருகடன்மேகலை முகமெனப்பெலிந்த
ஒற்றிமாநக ருடையோயுருவின்
பெற்றியொன்றுப் பெற்றோரியாரே
மின்னினியலின பிறங்குறின்சடையே
மன்னியவண்டமின் சென்னியின்வடிவே
பாவகன்பரிட்பனி மதிதன்னொடு
மூவகைச்சுடரு நின்னுதனோர்நாட்டம்
தண்ணொளியாரந் தாராகணமே
விண்ணவர்முதலா வேறோரிடமார்க்

கொண்டுறைவிசும்பே கோலநின்னுகம்
எண்டிசைதிண்டோளி ருங்கடலுடையே
அணியுடையல்குலு மவனிமண்டலமே
மணிமுடிப்பாந்தணின் ருளினைவழக்கே
ஒழியாதோடிய மாருதமுயிர்ப்பே
வழுவாவோசை முழுதுநின்வாய்மொழி
வானவர்முதலா மன்னுயிர்பறந்த
ஊனமின்ஞானத் தொகுதிநின்றுணர்வே
நெருங்கியவுலகினி னீர்மையுநிற்றலும்
சுருங்கலும்விரிதலுந் தோற்றநிற்றொழிலே
அமைத்தலுமழித்தலு மாங்கதன்முயற்சியும்
இமைத்தலும்விழித்தலு மாகுநின்னியல்பே
என்றிவைமுதலா வியல்புடைவடிவினோ
டொன்றியதுப்புரு விருவகையாகி
மூத்திறக்குணத்து நால்வகைப்பிறவி
அத்திறத்தைம்பொறி யறுவகைச்சமையமோ
டேழுலகாகி யெண்வகைமூர்த்தியோ
டூழிதோறூழி யெண்ணிறந்தோங்கி
எவ்வகையள வினிற்கூடிநின்
றவ்வகைப்பொருளு நீயாகியவிடத்தே
இடத்துறைமாத ரோடீருடம்பென்றும்
நடத்தினைநள்ளிரு ணவிற்றினையென்றும்
புலியதளன்பொடு புனைந்தோயென்றும்
பலிதிரிவாழ்க்கை பயின்றோயென்றும்
திருவமர்மாலொடு திசைமுகனென்றும்
அருவமுருவமு மானாயென்றும்
உளனேயென்று மிலனேயென்றும்
தளரானென்றும் தளர்வோனென்றும்
ஆதியென்றும் சோதினனென்றும்
போதியிற்பொலிந்த புராணரென்றும்
இன்னவைமுதலாத் தாமறியளவையின்
மன்னியநூலுடன் பன்மையுண்மபங்கிப்
பிணங்குமாந்தர் பெற்றிமைநோக்கி
அணங்கியவ்வவர்க் கவ்வவையாகியடை
பற்றிய பளிங்குபோலும்-

ஒற்றிமாநக ருடையோயுருவே
உருவாமுலகுக் கொருவனுகிய
பெரியோய்வடிவின் பிறிதிங்கின்மையின்
எம்பொருளாயினு மிங்குளதாமெனின்
அப்பொருளுனக்கே யவயவமாதலின்
முன்னியமூவெயின் முழங்கெரியூட்டித்
தொன்னீர்வையகந் துயர்கெடச்சூழ்ந்ததுன்
வேள்விமூர்த்திதன் றலையினைவிடுத்ததும்
நீள்விசுபாளிதன் ஞேளினைநெறித்ததும்
ஓங்கியமறையோற் கொருமுகமொழித்ததும்
பூங்கணைவேளைப் பொடிபடவிழித்ததும்
திறல்கெடவரக்கனைத் திருவிரலொறுத்ததும்
குறைபடக்கூற்றினைக் குறிப்பினிலடர்த்ததும்
என்றிவைமுதலா வாம்வினையெல்லாம்
நின்றுழிச்செறிந்தவை நின்செயலாதலின்
உலவாதொல்புக ழொற்றியூர
பகர்வோர்நினக்கு வேறின்மைகண்டவர்
நிகழ்ச்சியினி கழிலல்லது
புகழ்ச்சியிற்புடைப் பரோபொருளுணர்ந்தோரே
பொருளுணர்ந்தோங்கிய பூமகன்முதலா
இருவினையாக்கையி லியங்குமன்னுயிர்
உருவினுமுணர்வினு முயர்வினுபணியினும்
திருவினுந்திறலினுஞ் செய்தொழில்வகையினும்
வெவ்வேறுகி வினையொடும்பிரியா
தொவ்வாப்பண்மையுண் மற்றவரெழுக்கம்
மன்னியவேலையுள் வான்றிறைபோல
நின்னிடையெழுந்து நின்னிடையாகியும்
பெருகியுஞ்சுருங்கியும் பெயர்ந்துந்தோன்றியும்
விரவியும்வேருய் நின்றனைவிளக்கம்
ஓவாத்தொல் புகழொற்றியூர
மூவாமேனி முதல்வநின்னருள்
பெற்றவ ரறியினல்லது
மற்றவரறிவரோ நின்னிடைமயக்கே. (ச)

மயக்கமில்சொன்னீ யாயினுமற்றவை
துயக்கநின்றிர மறியாச்சூழலும்
உறையிடமுள்ள ஊாயினுமற்றது

கறைபடவாங்கே கரந்தகள்ளமும்
செய்வினையுலகினிற் செய்வோயெனினும்
அவ்வினைப்பயனீ யணுகாவணிமையும்
இனத்திடைஇன்பம் வேண்டிசிறப்பணிவோர்
மனத்திடைவாரி யாகியவனப்பும்
அன்பினடைந்தவர்க் கணிமையுமல்லவர்ச்
செய்மைநாடோறும்
என்பினையுருக்கு மியர்கையவாதலில்
கண்டவர்தமக்கே யூனுடலழிதல்
உண்டெனவுணர்ந் தனமொற்றியூர
மன்னியபெரும் புகழ்மாதவத்
துன்னியசெஞ்சடைத் தூமதியோயே. (ரு)

தூமதிசடைமிசைச் சூடுதறுநெறி
ஆமதியானென வமைத்தவாறே
அறனுருவாகிய வானேறேறுதல்
இறைவனியானென வியற்றுமாறே
அதுவவளவனென நின்றமையார்க்கும்
பொதுநிலையானென வுணர்த்தியபொருளே
முக்கணனென்பது முத்தீவேள்வியல்
தொக்கதென்னிடை யென்பதோர்சுருக்கே
வேதமான்மறி யேந்துதன்மற்றதன்
நாதனுனென நவிற்றுமாறே
மூவிலையொருதாட் சூலமேந்துதன்
மூவருமியானென மொழிந்தவாறே
எண்வகைமூர்த்தி யென்பதிவ்வுலகினில்
உண்மையானென வுணர்த்தியவாறே
நிலநீர்தீவளி யகல்வானென்றும்
உலவாத்தொல்புக ழுடையோயென்றும்
பொருளுநற்பூதப் படையோயென்றும்
தெருளநின்றுலகி னிற்றெருட்டுமாறே
ஈங்கிவைமுதலா வண்ணமும்வடிவும்
ஓங்குநின்பெருமை யுணர்த்தவுமுணராத்
தற்கொலிமாந்தர் தம்மிடைப்பிறந்த
சொற்பொருள்வண்மையிற் சுழலுமாந்தர்க்
காதியாகிய வருதொழிலாளர்

ஓதலோவா வொற்றியூர
சிறுவர்தஞ் செய்கையிற்படுத்து
முறுவலித்திறுத்திநீ முகப்படுமௗவே. (௬)
அளவினிலிறந்த பெருமையையாயினும்
எனதுளமகலர் வொடுங்கிநின்றுளையே
மெய்யினையிறந்த மெய்யினையாயினும்
வையகமுழுதுநின் வடிவெனப்படுமே
கைவலத்தலைநீ யெனினுங்காதல்
செய்வோர்வேண்டுஞ் சிறப்பொழியாமே
சொல்லியவகையாற் றுணையலையாயினும்
நல்லுயிர்கூட்ட நாயகநீயே
எங்குமுள்ளோ யெனினும்வஞ்சனை
தங்கியவவரைச் சார்விலைநீயே
அஃதான்று
பிறவாப்பிறவியை பெருகரப்பெருமையை
துறவாத்துரவியை தொடராத்தொடர்ச்சியை
நுகராதுகற்சியை நுணுகாதுநுட்பினை
அகலாவகற்சியை யணுகாவணிமையை
செய்யாச்செய்கையை சிறவாச்சிறப்பினை
வெய்யைதணியை விழுமியைநொய்யை
செய்யைபசியை வெளியைகரியை
ஆக்குதியழித்தி யானபல்பொருள்
நீக்குதிதொகுத்தி நீங்குதியடைதி
ஏனையவாகிய வெண்ணில்வல்குணம்
நினைதொருமயக்கு நீர்மையுவாதலின்
ஓங்குகடலுடுத்த வொற்றியூர
ஈங்கிது மொழிவார்தம்
சொன்னிலை சொருங்கிநல்லது
நின்னியலறிவோ ரியாரிருநிலத்தே (௭)
நிலத்திடைப்பொறையாய் வாவினினீண்டு
சொலத்தகுபெருமைத் தூராவாக்கை
மெய்வளியையொடு பித்தொன்றாக
ஐவகைநெடுங் காற்றுங்குடனடிப்ப
நரையெனுநுரையே நாடொறும்வெளிப்பத்
திரையுடைத்தோலே செழுந்திரையாகக்

கூடியகுருதி நீரினுணிறைந்து
மூடியவிரும லோரையின்முழங்கிச்
சுடிபசிவெகுளிச் சுறவினமெறியக்
குடரெனுமாலாக் கூட்டம்வந்தொலிப்ப
ஊன்றடியேலும் பினுட்டலடைந்து
தோன்றியபல்பிணிப் பின்னகஞ்சுழலக்
கால்கையினரம்பே கண்டமாக
மேதகுநிணமே மெய்ச்சாலாக
முழக்குடைத்துளையே முகங்களாக
வழக்குடைமூக்காரோ தம்வந்தொலிப்ப
இப்பரிசியற்றிய வுடலிருங்கட்டுத்
துப்புரவென்னுரின்சுழித்தலைப்பட்டு
ஆவாவென்னுநின் னருளினைப்பெற்றவர்
நாவாயாகிய நாதனின்பாத
முந்திற்றென்று முறைமையின்வணங்கிச்
சிந்தைக்கூம்பினைச் செவ்வியலிருத்தி
உருகியவாராவாய்ப்பூரித்துப்
பெருகியநிறையெனுங் கயிற்றிடைபிணித்துத்
துன்னியசுற்றச் சுடற்கயிரறுத்து
மன்னியஒருமைப்பொறியினைமுறுக்கிக்
காமப்பாரெனுங் கடுவெளியற்ற
தூமச்சோதிச் சுடர்க்குறநிறுத்திச்
சுறுங்காவுணர்ச்சுத்துடுப்பினைத்துழவீர்
நெருங்காவளவி னீள்கரையேற்ற
வாங்கவாத்திரை போக்குதிபோலும்
ஒருங்கடலுடுத்த வொற்றியூர (அ)
ஒற்றியூரவுலவாநின்குணம்
பற்றியாரப் பரவுதல்பொருட்டா
என்னிடைப்பிறந்த வின்னுப்புன்மொழி
நின்னிடையணுகா நீர்மையவாதலின்
ஆவலித்தழுதலி லகன்றதம்மனைக்
சேவலஞ்செய்மயிற் கேளாளாயினும்
பிறித்தற்கரியாப் பெற்றியதாகிப்
குறைவினிலார்த்துங் குழல்வித்தியல்வினை
யறியாதெண்ணி லூழிப்பிறவியின்

மயங்கிக்கண்ணிலர் கண்பெற்றாங்கே
தாய்தலைப்படாஇன் றளிஇனவணக்கம்
வாய்தலையறியா மயக்குறும்வினையேன்
மல்கியவின்பத்தோ டென்கூடிய
வெல்லையிலவாவினி லியற்றியவாகக்
கட்டியநீயே யவிழ்க்கினல்ல
தெட்டனையாயினு மியானிதற்கறியேன்
றுன்னிடையிருளென் னுந் தூற்றிடையொதுங்கி
வெள்ளிடைகாண விருப்புறுவினையேன்
றந்தையுந்தாயுஞ் சாதியுமறிவுஞ்
சிந்தையுந்திருவுஞ் செல்கதித்திறனுந்
துன்பமுந்துறவுந் தூய்மையுமறிவு
மின்பமும்புகழு மிவைபலபிறவுஞ்
சுவையொளியூறோசை நாற்றந்தோற்ற
மென்றிவைமுதலா விளங்குவவெல்லா
மொன்றனின்னடிக்கே யொருங்குடம்வைத்து
நின்றனன்றனியே னின்னடியல்லது
சார்வுமற்றின்மையிற் றளர்ந்தோர்காட்சிச்
சேர்விடமதனைத் திறப்படநாடி
யெய்துதற்கரியோ யானினிச்
செய்வதுமறிவனோ தெரியுங்காலே
காலற்சீறிய கழலோய்போற்றி
மூலத்தொகுதி முதல்வபோற்றி
யொற்றிமாநக ருடையோய்போற்றி
முற்றுமாகிய முதல்வபோற்றி
யணைதொறுஞ்சிறக்கு மமிர்தேபோற்றி -
பிணைபிறிதில்லா வீசபோற்றி
யார்வஞ்செய்பவக் கணியோய்போற்றி
தீர்விலின்சுவைத் தேனேபோற்றி
வஞ்சனைமாந்தரை மறந்தோய்போற்றி
நஞ்சினையமிர்தா நயந்தோய்போற்றி
விரிகடல்வையக வித்தேபோற்றி
புரிவுடைவனமாப் புணர்ந்தோய்போற்றி
காணமுன்பொருள் கருத்துறைசெம்மைக்
காணியாகிய வரனேபோற்றி
வெம்மைதண்மையென்றிவை குணமுடைமையிர்

பெண்ணொடாணெனும் பெயரோய்போற்றி
மேவியவவர்தமை வீட்டினிற்படுக்கும்
தீபமாகிய சிவனேபோற்றி
மாலோய்போற்றி மணாயோய்போற்றி
மேலாய்போற்றி வேதியபோற்றி
சந்திரபோற்றி தழலோய்போற்றி
யிந்திரபோற்றி யிறைவபோற்றி
யமராபோற்றி யழகாபோற்றி
குமராபோற்றி கூத்தாபோற்றி
பொருளேபோற்றி போற்றியென்றுனை
நாத்தழும்பிக்கநவிற்றினல்லை
தேற்றுதற்குரியோயாரிருநிலத்தே

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று,

உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்

பதினொன்றாந்திருமுறையுள்

திருவெண்காடரென்னும்

பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

ஐந்தாவது

# திருவேகம்பமுடையார் திருவந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

கட்டளைக்கலித்துறை.

மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுன்னைபோற்றுகின்ற
வித்தொண்டனென்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே. (க)

ஏகம்பனேயென்னையாள்பவனே யிமையோர்க்கிரங்கி
போகம்பன்னாளுங்கொடுக்கின்றநாயகபொங்குமைவாழ்
ஆகம்பொன்னாரமெனப்பொலிவுற்றுநன்னீரணியும்
ஆகம்பொன்மாமலையொப்பவனேயென்பனுதரித்தே. (உ)

தரித்தேன்மனத்துன்றிகழ்தருநாமந்தடம்பொழில்வாம்
வரித்தேன்முரலகச்சியேகம்பனேயென்றன்வல்வினையை

யறித்தேஜனைப்படியாதவரோழைமைகண்டவரைச்
சிரித்தேனுனக்கடியாரடிபூணத்தெளிந்தனனே. (௩)

தெளிதருகின்றதுசென்றன்மனநின்றிருவடிவம்
அளிதருநின்னருட்கையமினியிலையந்தச்செக்கர்
ஒளிதருமேனியெம்மேகம்பனேயென்றுகர்த்தவர்தாள்
தளிதருதூளியென்றன்றலைமேல்வைத்ததன்மைபெற்றே. (௪)

பெற்றுகந்தேனென்றுமர்ச்சனைசெய்யப்பெருகிநின்சீர்
கற்றுகந்தேனெனக்கருத்தினிதாக்கச்சிபேகம்பத்தின்
பற்றுகந்தேறுமுகந்தவனேபடர்நாககச்சின்
சுற்றுகந்தேர்விடைமேல்வருவாய்நின்றுணையடியே. (௫)

அடிநின்றசூழல்கோசரமாலுக்கயற்கலரின்
முடிநின்றசூண்முடிகாண்பரிதாயிற்றுக்கார்முகிலின்
இடிநின்றசூழ்குரலேறுடையேகம்பயாமெங்ஙனே
வடிநின்றசூலப்படையுடையாயைவணங்குவதே, (௬)

வணக்கந்தலைநின்றிருவடிக்கேசெய்யுமையல்கொண்டோ
ரிணக்கன்றிமற்றோரிணக்கறிவோமல்லம்வல்லரவின்
குணக்குன்றவில்லிகுளிர்கச்சியேகம்பங்கூடினல்லாற்
கணக்கொன்றுமற்றொருதேவரைப்பாடுங்கவிநலமே, (௭)

நலந்தரனானென்றுசொல்லுவன்கேண்மினல்லீர்களம்பு
கலந்தரனார்கச்சியேகம்பங்கண்டுகனற்றிகிரி
சலந்தரனாகமொழிக்கவைத்தாய்தக்கன்வேள்வியெல்லா
நிரந்தரமாகச்செய்தாயென்றுபூசித்துநின்மின்களே. (௮)

மின்களென்றாள்சடைகொண்டலென்னார்கண்டமேனிவண்ணம்
பொன்களென்றார்வெளிப்பாடுதம்பொன்னடிபூண்டுகொண்ட
வென்களென்றாலும்பிறிந்தறியார்கச்சியேகம்பத்தான்
றங்களென்றாருலகெல்லாநிலைபெற்றதன்மைகளே, (௯)

தன்மையிற்குன்றாத்தமத்தோரிமையவர்தாம்வணங்கும்
வண்மையிற்குன்றாமதிற்கச்சியேகம்பர்வண்கயிலைப்
பொன்மையிற்சாயலுஞ்சேயரிக்கண்ணும்புரிகுழலும்
மென்மையிற்சாயுமருங்குழலுங்காதல்விளைத்தனவே. (௰)

தனமிட்டிமைதழுவத்தழும்பற்றவர்தம்மடியார்
மனம்விட்டகலாமதிற்கச்சியேகம்பர்வான்கயிலைச்
சினம்விட்டகலக்களிறுவினாவியோர்சேயனையார்
புனம்விட்டகலார்பகலாம்பொழுதுநம்பூங்கொடியே (௰௧)

பூங்கொத்திருந்தழையார்பொழிற்கச்சியேகம்பர்பொற்பாற்
கோங்கத்திருந்தகுடுமிககயிலையெம்பொன்னொருத்தி

பாங்கொத்திருந்தனையாரணங்கேபடர்கல்லுருவி
யாங்கத்திருந்திழையாடிவந்தாற்கண்டடிவருத்தே, (யஉ)

வருத்தந்தருமெய்யுங்கையிற்றழையும்வன்மாவினவுங்
கருத்தந்தருக்குநடக்கவினவறையகழனிணையத்
திருத்தந்தருளுந்திகழ்கச்சியேகம்பர்சீர்கயிலைத்
துருத்தந்திருப்பதன்றிப்புனங்காக்குந்தொழிலெமக்கே, (யங)

எம்மையுமெம்மைப்பணிகொள்ளுங்கம்பபொழிற்கயிலை
யும்மையுமானிடமிப்புனத்தேவிற்றுவந்தமைந்தர்
தம்மையுமானையுஞ்சிந்தையநோக்கங்கவர்வவென்றோ
வம்மையுமம்மலர்க்கண்ணும்பெரியீரருளுமினே, (யச)

அருளைத்தருகம்பரம்பொற்கயிலையுளெம்மையரம்
பிருளைக்கரிமறிக்கும்மிவளையருத்தியெய்ய
வெருளக்கலைகணைதன்னொடும்போயினவில்லிமைக்கு
மருளைத்தருசொல்லியெங்கோவிலையுண்டிவையகத்தே. (யரு)

வையார்மழுப்படையேகம்பரீங்கோன்மலைபுனத்து
ளையார்வருகலையேனங்கரிதொடர்வேட்டையெல்லாம்
பொய்யானவையர்மனத்தவெம்பூங்கொடிகொங்கைபொரும்
பையாரரவிடையாயிற்றுவந்துபரிணமித்தே, (யசு)

பருமுத்துதிர்ததிடுஞ்சீர்மத்தயானைநுதல்பகுந்திட்
டுருமொத்ததிண்குரற்சீயந்திரிநெறியோங்குவைவாய்
பொருமுத்தலைவேர்படைக்கம்பர்பூங்கயிலைப்புனத்துட்
டருமுத்தன்நகத்தன்னசையால்வெற்பசார்வரிதே. (யஎ)

அரிதன்றிருக்கண்ணிடநிரம்பாயிரப்போதணிய
அரிதன்றிருவடிகர்ச்சித்தகண்ணுக்கருளுகம்பர்
அரிதன்றிருக்குங்குலியாலழுந்தகயிலையல்லிங்
கரிதென்றிருப்பதெம்பால்வெற்பவெம்மையபற்கஞ்சுதுமே. (யஅ)

அஞ்சரத்தான்பொடியாய்விழத்தீவிழித்தன்புசெய்வோர்
நெஞ்சரத்தாழ்வுதந்தோர்கச்சியேகம்பர்நீள்கயிலைக்
குஞ்சரத்தாழ்வரைவீழனுங்கொம்புய்யக்கும்பமுழ
வெஞ்சரத்தாரணவோவல்லோவிவ்வியன்முரசே. (யகூ)

சேய்தந்தகைம்மையுமைகணவன்றிருகேகம்பத்தான்
றாய்தந்தையாயுயிர்க்காப்போனகயிலைத்தயங்கிருள்வாய்
வேய்தந்ததோளிநம்மூசலொடும்விளாவேங்கைதன்னைப்
பாய்தந்துபூசலுண்டாங்கொண்டதோசைபகடுவந்தே. (உய)

வந்துமணம்பெறிற்பொன்னனையீர்மன்னுமேகம்பர்தம்
உந்துமருவிக்கயிலைமலையுயர்தேனிழிச்சிந்

தந்துமலர்கொய்துந்தண்டினைமேயுங்கிளிகடிந்துஞ்
சிந்தும்புகர்மலைக்கச்சுமிச்சாரற்றிரிந்தவனே. (உக)

திரியப்புரமெய்தவேகம்பனூர்திகழுங்கயிலைக்
கியக்குறவர்பருவத்திடுதாளம்வினையோன்
விரியச்சுருள்முதலாணுமடைந்தோம்விரைவிரைந்து
பிரியக்கதிர்முற்றினீர்பெற்றதென்னங்குப்பேசுமினே, (உஉ)

பேசுகயாவருமைக்கணியாரென்று பித்தரெங்கும்
பூசுகையார்திருநீற்றெழிலேகம்பர் பொற்கயிலைத்
தேசுகையார்சிலைவெற்பன்பிரியும் பரிசிலரக்
கூசுகைமாதுமில்லார்க்குலவேங்கைப் பெயர்தும்பை (உங)

பெயரர்நலத்தெழிலேகம்பனூர் பிறைதோய்கயிலை
பெயராதிருக்கப்பெறுகிளிகாள் புவனமெயிரிவின்
றுயரால்வருந்திமனமுமிங்கோடித் தொழுதுசென்றே
தயராதுரையும்வெற்பற் கடியற்றும்விடைதமினே (உச)

நம்மைப்பிறவிக்கல்கடப்பிப்பவர் நாம்வணக்கு
மும்மைத்திருக்கண்முகத்தெழிலேகம்பர் மொய்கயிலை
யம்மைக்கருங்கண்ணி தன்னொடின்பந்தருதண்புனமே
யெம்மைக்கவலைசெயச் சொல்லியே வல்லியெய்தியதே (உரு)

இயங்குந்திரிபுரமெய்தவேகப ரொழிற்கயிலைத்
தயங்குமலர்பொழில் காடையலாடருவித்தடங்கா
முயங்குமணியறைகாண் மொழியீரொழியாதுநெஞ்ச
மயங்கும்பரிசுபொன்னூர்சென்ற சூழல்வகுத்தெமக்கே (உசா)

வகுப்பாரிவர்போன்மணத்துக்குநாண் மணந்தன்னொடின்ப
மிகுப்பார்களாயிருன்று மிருவரைவிள்ளக்கள்வாய்
நெருப்பான்மலர்கொண்டு நின்றூர்கிடக்கநில்வுகம்பர்
தொகுப்பான்மணிசிந்தருவிக் கயிலையிச்சூழ்புனத்தே (உஎ)

புனங்குழையாதென்றினை கொய்ததும்போகலுற்ற
கனங்குழையாடற்பிரிய நமக்குறுங்கையறவால்
மனங்குழையாவருங்கண்கனிபண்பல பாடுந்தொண்டர்
இனங்குழையாத்தொழுமேகம்பரிக்கயிலாயத்துள்ளே (உஅ)

உள்ளம்பெரியரல்வாச்சிறுமானிட ருற்றசெல்வங்
கள்ளம்பெரியசிறுமனத்தார்க்கன்றிக் கங்கையென்னும்
வெள்ளம்பெரியசடைத்திருவேகம்பர் விண்ணரணந்
தள்ளம்பெரிகொண்டமைத்தாடியவர் சார்வதன்றே (உகூ)

அன்றும்பகையடர்க்கும் பரிமாவுமதவ்ருவிக்
குன்றும்பதாதியுந்தேருங்குலவிக்குடைகீழ்

நின்றும்பொலியினுங்கம்பர்நன்னீறு நுதற்கிலரேல்
என்றுமரசுமுரசும்பொழியா திருநிலத்தே (௯௰)

நிலத்திமையோரில்லையாய்ப் பிறந்துமறையொடங்க
வலத்திமைப்போதும் பிரியாரெரிவளர்த்தாலும்வெற்பன்
குலத்துமையோர்பங்கர்கச்சியுளே கம்பங்கூடித்தொழு
நலத்தமையாதவர்வேட்டுவர் தம்மினடுப்படையே (௯௧)

படையாலுயிர்கொன்று தின்று பசுக்களைப்போலச்செல்லு
நடையாலறிவின்றிநான் சிறிதின்றினகுங்குலத்திற்
கடையாய்ப்பிறக்கினுங்கச்சியுளே கம்பத்தெங்களையா
ளுடையான்கழற்கன்ப ரேலவன்யாவர்க்குமுத்தமரே. (௯௨)

உத்துங்கயானையுரியார்விரலா லரக்கன்சென்னி
உத்துங்கையானைவிருபதுஞ் சோர்தரவைத்திலயை
யொத்துங்கையாவவன்பாடக் கயிலையுள்ளோர்நற்கைவா
ளொத்துங்கையானென்று கந்தளித்தார்கச்சியேகம்பரே, (௯௩)

அம்பரங்காலனனீர் நிலந்திங்களருக்கனனு
வம்பரங்கொள்வதோர் வேழத்துரியவன்றன்னுருவா
மெம்பரன்கச்சியுளே கம்பனத்தரிடையடைவா
னம்பரன்றன்னடியாரறிவார் கட்கவன்றுணையே (௯௪)

துணைத்தாமரையடியும் பவளத்திரணன்குறங்கும்
பணைத்தோளகலமுங்கண்டத்து நீலமுமத்துமின்
பணைத்தாலனசடையுந் திருமுக்கணும்பெண்ணோர்பக்கத்
தணைத்தாமொழிற்கம்ப ரெங்கள்பிரானார்கழகியவே, (௯௫)

அழகறிவிற்பெரிதாகிய வெகம்பரத்தர்கொற்றம்
பழகறிவிற்பெரியோர்தமைப் பற்றலர்பற்றுமன்பின்
குழகறிவேற்பினுமொன்றறி யாரறியாமைதெய்வக்
கிழகெறியப்பட்டுலந் தாருலகிற்கிடந்தனரே, (௯௬)

கிடக்குமொருபாலிரைக்கின்ற பாம்பொருபான்மதியந்
தொடக்குண்டிலங்குமலங்குந் திரைக்கங்கைசூடுங்கொன்றை
வடக்குண்டுகட்டத்தலைமாலை வாளான்மலைந்தவெம்போர்
கடக்கும்விடைத்திருவேகம்பர் கற்றைச்சடைமுடியே, (௯௭)

கற்றைப்பவளச்சடைவலம்பூக்கமழ் கொன்றையந்தார்
முற்றுத்திலர்மதியின்கொழுந்தே கம்பர்மொய்குழலா
மற்றைத்திசையின்மணிப்பொற் கொழுந்தத்தரங்கழுநீர்
தெற்றிப்பொலிகின்ற சூட்டழகாகித்திகழ்தருமே. (௯௮)

தருமருட்டன்மைவலப்பாற்கமலக்க ணெற்றியின்மேற்
றிருமலர்கண்பிளவின்றி கழுந்தழல்செல்வக்கம்பர்
கருமலர்கண்ணிடப்பாலதுநீலங் கனிமதத்து
வருநுதற்பொட்டணங்குக் குயர்தோங்குமலர்க்குழலே, (௯௯)

மலர்ந்தபடத்துச்சியைந்தினுஞ் செஞ்சுடர்மாமணிவிட்
டலர்ந்தமணிக்குண்டலம் வலக்காதினிலாடிவரும்
நலந்திருநீள்வயிரம்வெயிற்பாயு நகுமணிகள்
கலந்தசெம்பொன்மகரக் குழையேகம்பர்காதிடமே. (சுல)

காதலைக்கும்வலத்தோள் பவளக்குன்றமங்குயர்ந்து
போதலைக்கும்பனிப்பொன் மலைநீற்றின்பொலியகலந்
தாதலைக்குங்குழல்சேர்பணைத் தோணறுஞ்சாந்தணிந்து
சூதலைக்குமுலைமார்பிட மேகம்பர்சுந்தரமே. (சுக)

தரம்போற்பழியுமுலகட்டி யெய்த்துத்தரந்தளரா
வுரம்பொற்புடையதிரு வயிறும்வலமும்பர்மும்மையு
புரம்பொற்பழித்தகம்பர்க்குத் தரத்திடுபூண்முலையு
நிரம்பப்பொருதுதளரிளவஞ்சியு நேருடைத்தே. (சுஉ)

உடைப்புலியாடையின்மே லுரகக்கச்சுவீக்கிமுஞ்சி
வடத்தொருகோவணந் தோன்றுமணைவலமற்றையல்குற்
றொடக்குறுகாஞ்சித் தொடுத்தவரசிலை தூநுண்டுகில்
அடற்பொலியேறுடைய்ய கம்பமேயவடிகளுக்கே. (சுங)

அடிவலப்பாலதுசெந்தாமரை யொத்ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற்கூற்றினெருத் திறவைத்ததிளந்தளிரி
ணடியிடப்பாலதுபஞ்சுறவஞ் சுஞ்சிலம்பணிந்த
வடிவுடைத்தார்கச்சியே கம்பமேயவரதருக்கே. (சுச)

தருக்கவற்றுன்மிக்கமுப்புர மெய்தயன்றன்றலையை
நெருக்கவற்றேடமழுவாளிசைந்தது நெற்களென்றும்
பருக்கவற்றுங்கச்சியேகம் பரத்தர்தம்பாம்புகளின்
றிருக்கயிற்றலிட்டருளுங் கடகத்திருக்கரமே. (சுரு)

கரத்தத்தமருகத்தோசை கடுத்தண்டமீபிளப்ப
வரத்தத்தபாதநெரித்திட்ட வனிதலநெரியத்
தரத்தத்திசைகளுக்கப்புறம் போர்ப்பச்சடைவிரித்து
வரத்தைத்தருகம்பராடுவ தொலலியுமாநடமே. (சுசா)

நடனம்பிரானுகந்துய்யக் கொண்டானென்றுநம்மறையோ
ருடன்வந்துமூவாயிரவரிறைஞ்சி நிறைந்தவன்பும்
கடனன்றிமற்றறியாத் தில்லையம்பலங்காளாத்தியா
மிடமெமபிரான்கச்சி யேகம்பமேயாற்கினியனவே (சுஎ)

இனியவரின்னாரவரையொப்பாற் பிறரென்னவெண்ணாத்
தனியவர்தையலுடனா முருவதிறம்பணித்த
முனியவரென்றுமுகந்த முக்கண்ணவர்தண்டியன்புக்
கினியவர்காய்மழுவாட்படையார் கச்சியேகம்பரே. (சுஅ)

பரவித்தனைநினையக்கச்சியேகம்பர்பண்ணுமையல்
வரவித்தனையுள்ளதெங்கறிந்தேன்முன்னவர்மகனார்
புரவித்தனையடிக்கக்கொடிதாய்விடியாவிரவி
லரவித்தனையுங்கொண்டார்மடவார்முன்றிலாட்டிடவே (௪௯)

இடவஞ்சுருக்கெனப்பாயுமெஞ்சென்னிநகுதலைகண்
டிடவஞ்சுவர்மடவாரிரிகின்றனரேகம்பத்தீர்
படமஞ்சுவாயதுந்நாகமிரைக்குமதனுக்குமுற்
படவஞ்சுவரெங்ஙனேபலிவந்திடும்பாங்குகளே. (௫௰)

பாங்குடைக்கோட்புலியின்னதள்கொண்டீர்நும்பாரிடங்க
டாங்குடைகொள்ளப்பலிகொள்ளவந்தீர்தடமங்கமலம்
பூங்குடைகொள்ளப்புனர்கச்சியேகம்பங்கோயில்கொண்டீ
ரீங்கிடைகொள்ளக்கலைகொள்ளவந்தீரிடைக்குமின்றே, (௫௧)

இடைக்குமின்றேற்குமிணைமுலையாய்முதியார்கடஞ்சொற்
கடைக்கணற்றாங்கச்சியேகம்பனையங்கொளக்கடவும
விடைக்குமுன்றேற்றநின்றிணியிந்தமொய்குழலார்
கிடைக்குமுன்றேற்றஞ்சங்கிதுவோதங்கிறித்துவமே, (௫௨)

கிறிபலபேசிச்சதிராணடந்துவிடங்குபடக்
குறிபலபாடிக்குளிர்கச்சியேகம்பனையங்கொள்ள
நெறிபலவார்குழலார்மெலிவுற்றநெடுந்தெருவிற்
செறிபலவெள்வளைபோயினதாயர்கடேடுவரோ. (௫௩)

தேடுற்றிலகள்ளநோக்கந் தெரிந்திலசொற்கண்முடி
கூடிற்றிலகுழல்கொங்கை பொடித்திலகூறுமிவன்
மாடுற்றிலமணியின் மடவல்குலுமற்றிவள்பா
றாடுற்றிலவெழிலே கம்பனார்க்குள்ளநல்கிடத்தே. (௫௪)

நல்கும்புகழ்கடவூர்நன் மறையவனுய்யநண்ணிக்
கொல்கின்றகூற்றக்குமைதத வெங்கூற்றங்குளிர்திணாகண்
மல்குந்திருமறைக்காட்டமிர் தென்றுமலைமகடான்
புல்கும்பொழிற்கச்சி யேகம்பமேவியபொன்மலையே, (௫௫)

மலையத்தகத்தியனர்ச்சிக்க மன்னிவடகயிலை
நிலையத்தமரர்தொழவிருந்தானெடு மேருவென்னுஞ்
சிலையத்தன்னைப்பொன் மதிற்றிருவேகம்பத்தான்றிகழ்நி
ரலையத்தடம்பொன்னிசூழ்திருவை யாற்றருமணியே. (௫௬)

மணியாரருவித்தடவிமயங்கிடக் கொல்லிகல்லின்
றிணியாரருவியினார்த்த சிராமலையைவணங்க

ளணியாருவிகவர்கிரி யொப்புமின் சாரல்விந்தம்
பணிவாருவினைதீர்க்குமே கம்பர்பருப்பதமே (௫௭)

பருப்பதங்கார்தவழ்மந்தர மிந்திரநீலம்வெள்ளை
மருப்பதங்கார்கருங்குன்றியங் கும்பரங்குன்றவில்லார்
நெருப்பதங்காவுதிநாறு மயேந்திரமென்றிவற்றி
லிருப்பதங்காவுகந்தான் கச்சியேகம்பத்தெம்மிறையே. (௫௮)

இறைத்தார்புரமெய்தவில்லிமை நல்லிமவான்மகட்கு
மறைத்தார்கருங்குன்றம்வெண் குன்றஞ்செங்குன்றமன்னற்குன்ற
நிறைத்தார்நெடுங்குன்றநீள்கழுக் குன்றமென்றீவினைகள்
குறைத்தார்முதுகுன்ற மேகம்பர்குன்றென்றுகூறுமினே (௫௯)

கூறுமின்றொண்டர்குற்றால நெய்த்தானந்துருத்தியம்பேர்
தேறுமின்வேள்விக்குடித் திருத்தோணிபுரம்பழன
மாறுமின்போற்சடை வைத்தவனாரூரிடைமருதென்
றேறுமினீரெம்பிரான் கச்சியேகம்பமுன்னினைந்தே. (௬௰

நினைவார்க்கருளும்பிரான் திருச்சோற்றுத்துறைநியமம்
புனைவார்சடையோன்புகலூர் புறம்பியம்பூவணநீர்
நனைவார்பொழிற்றிருவெண் காடுபாச்சிலதிகையென்று
நினைவார்தருநெஞ்சினீர் கச்சியேகம்பநண்ணுமினே. (௬௧)

நண்ணிப்பரவுந்திருவாவடு துறைநல்லநல்லூர்
மண்ணிற்பொலிகடம்பூர் கடம்பந்துறைமன்னுபுன்கூ
ரெண்ணற்கரியபராயத்துறை நல்லெதிர்கொள்பாடிக்
கண்ணிபபிறைச்சடையோன் கச்சியேகம்பங்காண்மின்சென்றே. ()

சென்றேறிவிண்ணுறுமண்ணுமலை திகழ்வல்லமென்பூ
வின்றேற்றல்பாய்திருமால் பேறுபாசூரொழில்முந்தூர்
வன்றேரவன்றிருவிற்பெரும் பேறுமதிலொற்றியூர்
நின்றோர்தருகச்சியேகம்பமேயார் நிலாவியவே. (௬௩)

நிலாவுபுகழ்த்திருவொத்தூர் திருவாமாத்தூர்நிறைநீர்
சுலாவுசடையோன்புலிவலம் வில்வலம்கொச்சைதொண்டர்
குலாவுந்திருப் .ணங்காடு நன்மாகறல்கூற்றம்வந்தா
லலாவென்றடியார்க் கருள்புரியேகம்பராலயமே (௬௪)

ஆலயங்கார்கருகாவைகச் சூர்திருக்க ரிகரை
வேலையங்கேதுதிருவான்மியூர் திருவூரன்மிக்க
சோலையங்கார்திருப்போந்தைமுக் கோணந்தொடர்கடுக்கை
மாலையன்வாழ்திருவாலங்கா டேகம்பம்வாழ்த்துமினே. (௬௫)

வாழப்பெரிதெமக்கின்னருள்செய்யு மலர்க்கழலோர்
தாழச்சடைத்திருவேகம்பர் தம்மைத்தொழாதவர்போய்
வாழப்பரற்சுரமாற்றுதவிரடிப் பூங்குழலெம்
ஏழைக்கிடையிருக்குங் குயபாரமிபக்குறினே. (௬௬)

உறுகின்றவெவ்வழலக்கடமிக்கொடிக்குன்பின்வரப்
பெறுகின்றவண்மையினாலையபேரருளேகம்பனார்
துறுகின்றமென்மலர்த்தண்பொழிற்கச்சியைச்சூழ்ந்திளையோர்
குறுகின்றபூங்குவளைக்குறுந்தண்பணையென்றுகொளே. (௬௭)

கொள்ளுங்கடுங்கதிரிற்கள்ளித்திச்சிலவேயுலர்ந்து-
விள்ளும்வெடிபடும்பாலைபெண்பாலன்விடலைபின்னே
தெள்ளும்புனர்கச்சியுட்டிருவேகம்பர்சேவடியை
யுள்ளுமதுமறந்தாளெனப்போவதுனைப்பரிதே. (௬௮)

பரிப்பருந்திண்ணமைப்படையதுகானணைணிற்சிறகு
விரிப்பருந்துக்கிரையாம்வெய்யவனஞ்சலஞ்சடைமேற்
றரிப்பருதிண்கங்கையார்திருவேகம்பமன்னபொன்னே
வரிப்பருந்திண்சிலையேயுமராயின்மறைகுவனே, (௬௯)

வன்வரித்திண்புலியின்னதளேகம்பமன்னருளே
யென்வருபொன்னணங்கென்னணம்கிற்கெனெழிற்கழங்குந்
தன்வரிப்பந்துங்கொடுத்தெனைப்புல்லியுமிற்பிரிந்தே
யின்வரிக்கல்லதர்செல்வதெங்கேயொல்குமேழைநெஞ்சே, (௭௦)

நெஞ்சார்தரவின்பஞ்செய்கழலேகம்பர்கச்சியன்னாள்
பஞ்சாரடிவைத்தபாங்கிவையாங்கவள்பெற்றெடுத்த
வெஞ்சார்வொழியத்தன்பின்செல்முன்செல்வெடுவெடென்ற
வஞ்சாவடுதிறற்காளைதன்போக்கிவையந்தத்திலே. (௭௧]

இலவவெங்கானுனையல்லாற்றொழுஞ்சரணேகம்பனார்
நிலவுஞ்சுடரொளிவெய்யவனேதண்மலர்மிதித்துச்
செலவும்பருக்கைகுளிரத்தளிரடிசெல்சுரத்துன்
னுலகுங்கதிர்தணிவிதருள்செய்யுன்தனுறுதுணைக்கே. (௭௨)

துணையொத்தகோவையும்போவெழிற்பேதையுந்தோன்றலுமுன்
னிணையொத்தகொங்கையோடேயொத்தகாதலொடேகினரோ
யணையத்தரோரொருத்தகாளையைக்கண்டனமற்றவரோற்
பிணையொத்தனோக்குடைப்பெண்ணிவடன்னொடும்பேசுமினே. (௭௩)

பின்னலிக்கும்வணக்கத்திடையானையுமிளியைய
நென்னலிப்பாக்கைவந்தெய்திடுவிரொம்மனையிற்கண்டீர்
பின்னரிப்போக்கருங்குன்றுகடந்தவரின்றுகம்பர்
மன்னரிதேர்ந்துதொழுங்கச்சிநாட்டிடைவைகுவரோ. (௭௪)

உவரச்சொல்வேடுடைக்காடுகந்தாடியவேகம்பனார்
அவரக்கன்போனவிமானத்தையாயிரமுண்மைசுற்றுந்
துவரச்சிகரச்சிவாலயஞ்சூலந்துலங்குவிண்மேற்
கவரக்கொடிதிளைக்குங்கச்சிகாணினுங்கார்மயிலே, (௭௫)

கார்மிக்ககண்டத்தெழிற்றிருவேகம்பர்கச்சியின்வா
யோர்மிக்கசேற்றெழினென்னடுவோரொலிபொன்மலைபோற்
போர்மிக்கசென்னல்குவிப்போரொலிகருப்பாலையொலி
நீர்மிக்கமாக்கடலின்றொலியேயொக்குநேரிழையே, (௭௬)

நேர்த்தமையாமைவிறற்கொடுவேடர்நெடுஞ்சுரத்தை
பார்த்தமையாலிமைதீர்த்தகண்பொன்னேபகட்டுரிவைப்
போர்த்தமையானுமைநோக்கருங்கம்பர்கச்சிப்பொழிலுட்
சேர்த்தமையாலிமைப்போதணிசீதஞ்சிறந்தனவே, (௭௭)

சிறைவண்டுபாடுங்கமலக்கிடங்கிவைசெம்பழுக்கா
நிறைகொண்டபாளைக்கமுகின்பொழிலிவைதீங்கனியின்
பொறைகொண்டவாழைப்பொதும்புவைபுன்சடையேகம்பனார்
நறைகொண்டபுங்கச்சிநாடெங்குமிவ்வண்ணநன்னுதலே. (௭௮)

நன்னுதலார்கருங்கண்ணுஞ்செவ்வாயுமிவ்வாறெனப்போய்
மன்னிதழார்திருநீலமுமாம்பலும்பூப்பவள்ளை
யென்னவெலாமொப்புகாதென்றுவீறிடுமேகம்பனார்
பொன்னுதலார்விழியார்கச்சிநாட்டுழிப்பொய்கையுளே, (௭௯)

உளவார்குளிரநெருங்கிக்கருங்கிடங்கிட்டநன்னீர்
வளவாளைகளொடுசெங்கயன்மேய்கின்றவெங்களையாட்
கொளவார்பிறவிகொடாதவேகம்பர்குளிர்குவளை
களவார்தருகச்சிநாட்டெழிலேரிகளப்பரப்பே. (௮௰)

பரப்பார்விசும்பிற்படிந்தகருமுகிலன்னநன்னீர்
தரப்பாசிகண்மிகுபண்பொடுசெம்படர்தண்பணைவாய்ச்
சுரப்பாரொருமைமலர்தின்னத்துன்னுகராவொருத்தல்
பொரப்பார்பொலிநுதலாய்ச்செல்வக்கம்பர்தம்பூங்கச்சியே. (௮௧)

கச்சார்முலைமலைமங்கைகண்ணாரவெண்ணான்கறமும்
வைச்சார்மகிழ்திருவேகம்பர்தேவிமகிழவிண்ணோர்
விச்சாதரர்தொழுகின்றவிமானமுந்தன்மமரு
வச்சாலையும்பரப்பாங்கணிமாடங்களோங்கினவே, (௮௨)

ஓங்கினவூரகமுள்ளகமும்பருருகிடமாம்
பாங்கினினின்றதரியுறைபாடகந்தெவ்விரிய
வாங்கினவாட்கண்ணிமற்றவர்மைத்துனிவான்கவிக
டாங்கினநாட்டிருந்தாளதுதன்மனையாயிழையே, (௮௩)

இழையாரரவணியேகம்ப நெற்றிவிழியின்வந்த
பிழையாவருணம்பிராட்டிய தின்னபிறங்கலுன்னு

நுழையாவருதிரி சூலத்தனோக்கரும்பொன்கடுகைத்
தழையார்பொலிவதுபொன்னே நமக்குத்தளர்வில்லையே, (௮௪)
தளராமிகுவெள்ளங்கண்டுமை யோடித்தழைத்தழுவக்
கிளையார்வளைக்கைவடுப்படு மீங்கோர்கிறிபடுத்தார்
வளமாப்பொழிற்றிருவே கம்பமற்றிதுவந்திறைஞ்சி
யுளராவதுபடைத்தோ மடவாயிவ்வுலகத்துள்ளே. (௮௫)
உலவியமின்வடம்வீசி யுருமதிர்வுண்முழங்கி
வலவியமாமதம்பாய்முகிலி யானைகள்வானில்வந்தாற்
கலவியவார்குழல்பின்னமொன் பாரினெனநினைந்து
நிலவியவேகம்பர்கோயிற் கொடியன்னநீர்மையனே. (௮௬)
நீரொன்னிலும்மழுங்கண்முகில் காணெஞ்சமஞ்சலையென்
றூரொன்னிலுந்தமராயுறைப்பாரமராபதிக்கு
நேரொன்னிலுந்தகுங்கச்சியுளே கம்பர்நீண்மதில்வாய்ச்
சேரொன்னிலுந்தங்கும்வாட் கண்ணிதானன்பர்தேர்வரவே. (௮௭)
வரங்கொண்டிமையோர்நலங் கொள்ளுமேகம்பர்கச்சியென்னாய்
பரங்கொங்கைதூவன்மீனீர் முத்தமன்பர்தந்தேரின்முன்னே (தின்
தரங்கொண்டுபூக்கொண்டுகொன்றை பொன்னாகத்தண்காந்தள்கொத்
கரங்கொண்டுபொற்சுண்ண மேந்தவும்போந்தனகார்முகிலே (௮௮)
கார்முகமாரவண்கைக்கொண்ட கம்பர்கழற்றொழுது
போர்முகமாப்பகைவெல்லச் சென்றார்நினையார்புணரி
நீர்முகமாகவிருண்டு சுரந்தது நேரிழைநா
மார்முகமாகவினைக்கடனீந்தும் வெய்துயிர்ப்பே. (௮௯)
உயிராயினவன்பர்தேர்வரக் கேட்டுமுன்வாட்டமுற்ற
பயிரார்புயல்பெற்றதென்னநம்பல் வளைபான்மைகளாந்
தயிரார்பானெய்யொடுமாடிய வேகம்பர்தம்மருள்போற்
கயிராவளையழுந்தக் கச்சிறுத்தனகார்மயிலே. (௯௰)
கார்விடைவண்ணத்தனன்றெழ் தழுவினிமின்றுதனிப்
போர்விடைப்பெற்றெதிர்மாண்டா ரெனவண்டர்போதவிட்டார்
தார்விடையேகம்பர்கச்சிப்புறவிடை தம்பொனன்பூண்
மார்விடைவைகல்பெறுவார் தழுவமழலிடையே (௯௧)
விடைபாய்கொடுமையெண்ணாதுமெலாங் கன்னிவேர்கருங்கட்
கடைபாய்மனத்தினங்காளையர் புல்கொலிகம்பர்கச்சி
மடைபாய்வயலிளமுல்லையின் மாங்கன்றொடான்கன்றினங்
கடையாய்தொறும்பதிமன்றிற் கடல்போற்கலந்தெழுமே (௯௨)

கழுமலர்த்தண்பொழிலேகம்பர் கச்சியிருங்கடல்வாய்க்
கொழுமணப்புன்னைக்குரவான்மணற்குன்றிற் பாதர்கொம்பே
செழுமலர்ச்சேலல்லவாளல்லவேலல்லநீலமல்ல
முழுமலர்க்கூரம்பினோரிரண்டாலு முகத்தெனவே (கூ௩)

முகம்பாகம்பண்டமும்பாகமென் றோதியமூதுமையை
யுகம்பார்த்திரேலென்னலமுய ரேகம்பர்கச்சிமுன்னி
ரகம்பாகவார்வினளவில்லை யென்னின்பரவளச்செவ்வாய்
நகம்பாற்பொழிற்பெற்றநாமுற்றவர் கொள்கநன்மயலே. (கூ௪)

மயக்கத்தநல்லிருட்கொல்லுஞ் சுறவொடெறிமகர
மியக்கத்திடிசுழியோதங் கழிகிளரகழித்தார்
துயக்கத்தவர்கருளாக்கம்பர் கச்சிகடலர்பொன்னூன்
முயக்கத்தகல்வுபொருள் கொண்கநீர்வருமூர்க்கஞ்சுமே (கூ௫)

மேயிணைவைக்கக்குருகுணராமது வுண்டுபுன்னை
மீயிணைவண்டோதமர்புக்கடிய விரிகடல்வாய்ப்
பாயிணைநாகங்கொண்டோன் றொழுங்கம்பர்கச்சிப்பவ்வநீர்
தூயிணைகானன்மற்றாரறிவார் தந்துறைவர்பொய்யே. (கூ௬)

பொய்வருநெஞ்சினர் வஞ்சனையாளையும்போகவிடா
மெய்வரும்பேரருளேகம்பர் கச்சிவிளையினவாய்க்
கைவரும்புள்ளொடுசங்கினமார்ப்பதஞ் சேர்ப்பர்திண்டே
ளைவருதர்மங்களினம் வந்தார்ப்பவணைகின்றதே. (கூ௭)

இன்றுசெய்வோமிதனிற் றிருவேகம்பர்க்கெத்தனையு
நன்றுசெய்வோம்பணிநாளை யென்றுள்ளிநெஞ்சேயுடலிற்
சென்றுசெயாணைவிடுந்துணை நாளும்விடாதடிமை
நின்றுசெய்வாரவர்தங்களி னீணெறிகாட்டுவரே. (கூ௮)

காட்டவைத்தார்தம்மை யாமிடிப்பூப்பெய்யக்காலவெள்ள
மீட்டிவைத்தார்தொழுவேகம்ப ரேதுமிலாதவெம்மைப்
பூட்டிவைத்தார்தமக்கன்பது பெற்றுப்பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத்தார்பரவித் தொழுதாமவர்பாதங்களே. (கூகூ)

பாதம்பரவியோர்ப்பித்துப் பிதற்றியும்பல்பிணியும்
மேதம்புகுதாவகையருளே கம்பரேத்தெனவே
போதம்பொருளாற்பொலியாத புன்சொற்பனுவல்களும்
வேதம்பொலியும்பொருளா மெனக்கொள்வர்மெய்த்தொண்டரே. ()

திருச்சிற்றம்பலம்.

கணபதிதுணை.

பட்டணத்துப்பிள்ளையார்

# திருப்பாடற்றிரட்டு.

## முதலாவது

## கோயிற்றிருவகவல்.

நினைமின்மனனே நினைமின்மனனே
சிவபெருமானைச் செம்பொனம்பலவனை
நினைமின்மனனே நினைமின்மனனே
அலகைத்தேரி னலமருகாலின்
உலகப்போய்வாழ்க்கையை யுடலையோம்பற்க
பிறந்தனவிறக்கு மிறந்தனபிறக்கும்
தோன்றினமறையி மறைந்தனதோன்றும்
பெருத்தனசிறுக்குஞ் சிறுத்தனபெருக்கும்
உணர்ந்தனமறக்கு மறந்தனவுணரும்
புணர்ந்தனபிரியும் பிரிந்தனபுணரும்
அருந்தினமலமாம் புனைந்தனவழுக்காம்
உவப்பனவெறுப்பாம் வெறுப்பனவுவப்பாம்
என்றிவையனைத்து முணர்ந்தனையன்றியும்
பிறந்தனபிறந்தனபிறவிகடோறும்
கொன்றனையனைத்து மனைத்துநினைத்தின்றன
தின்றனையனைத்து மனைத்துநினைத்தின்றன
பெற்றனையனைத்து மனைத்துநினைப்பெற்றன
ஓம்பினையனைத்துமனைத்து நினையோம்பின
செல்வத்துக்களித்தனை தரித்திரத்தழுங்கினை
சுவர்க்கத்திருந்தனை நரகிற்கிடந்தனை
இன்பமுந்துன்பமு மிருநிலத்தருந்தினை
ஒன்றென்றொழியா துற்றனையன்றியும்
புற்புதக்குரம்பைத் துச்சிலொதுக்கிடம்
என்னநின்றியங்கு மிருவினைக்கூட்டைக்
கல்லினும்வலிதாக் கருதினையிதனுள்
பூனையும்நீறும் புறப்படுமொருபொறி
மீளும்குறும்பி வெளிப்படுமொறுபொரி
சளியுநீறுந்தவழு மொறுபொறி
உமிழ்நீர்கோழை யொழுகுமொருபொறி
வளியுமலமும்வழங்கு மொருபொறி

௱௰ இரண்டாவது கோயிற்றிருவகவல்.

சலமுஞ்சியுஞ் சரியுமொருவழி
உள்ளுறத்தொடங்கி வெளிப்படநாறும்
சட்டகமுடிவிற் சுட்டெலும்பாகும்
உடலுறுவாழ்க்கையை யுள்ளுறத்தேர்ந்து
கடிமலர்க்கொன்றைச் சடைமுடிக்கடவுளை
ஒழிவருஞ்சிவபெரும் போகவின்பத்தை
நிழலெனக்கடவா நீர்மையொடுபொருந்தி
எனதறநினைவற விருவினைமலமற
வரவொடுசெலவற மருளறவிருளற
இரவொடுபகலற விகபரமறவொரு
முதல்வனைத்தில்லையுண் மூலத்தெழுஞ்சோதியை
அம்பலத்தரசனை யானந்தக்கூத்தனை
நெருப்பினிலரக்கென நெக்குநெக்குருகித்
திருச்சிற்றம்பலத் தொளிருஞ்சிவனை
நினைமின்மனனே நினைமின்மனனே
சிவபெருமானைச் செம்பொனம்பலவனை
நினைமின்மனனே நினைமின்மனனே
காதளவோடியகலகப்பாதகக்
கண்ணியர்மருங்கிற்புண்ணுடனடுங்
காதலுங்கருத்து மல்லானின்னிருதாட்
பங்கையஞ்சூடப் பாக்கியஞ்செய்யாச்
சங்கடங்கூர்ந்த தமியேன்பாங்கிருந்
தங்கோடிகோட லமருங்கள்வர்
ஐவர்கலகமிட் டலைக்குங்கானகம்
சலமலப்பேழை யிருவினைப்பெட்டகம்
வாதபித்தசிலேட்டுமங்குடிபுகுஞ்சீரார்
ஊத்தைப்புன்றோ லுதிரக்கட்டளை
நாற்றப்பாண்ட நான்முழத்தொன்பது
பீற்றற்றுண்டம் பேசுமாத்தோட்டம்
அடலைப்பெரிய சுடலைத்திட்டருள்
ஆசைக்கயிற்றி லாடும்பம்பரம்
ஓயாநோய்க்கிட மோடுமரக்கலம்
மாயாவிகார மரணப்பஞ்சரம்
சோற்றுத்துருத்தி தூற்றும்பத்தம்
காற்றிற்பறக்குங் காணப்பட்டம்

விதிவழித்தருமன் வெட்டுங்கட்டை
சதுர்முகப்பாணன்றைக்குஞ்சட்டை
ஏமக்கனலி லிடுசிலவிருந்து
காமக்கனலிற் கருகுஞ்சருகு
கிருமிகிண்டுங் கிழங்குஞ்சருமி
பவக்கொழுந்தேறுங் கவைக்கொழுகொம்பு
மணமாய்நடக்கும் வடிவின்முடிவிற்
பிணமாய்க்கிடக்கும் பிண்டம்பிணமே
ஊரிற்கிடக்க வொட்டாவுபாதி
காலெதிர்குவித்த பூளைகாலைக்
கதிரெதிர்ப்பட்ட கடும்பனிக்கூட்டம்
அந்தரத்தியங்கு மிந்திரசாபம்
அதிருமேகத் துருவினருநிழல்
நீரிற்குமிழி நீர்மேலெழுத்து
கண்டுயில்கனவிற் கண்டகாட்சி
அதனினும்பொல்லா மாயக்களங்கம்
அமையுமமையும் பிரானேயமையும்
இமையவல்லி வாழியென்றேத்த
ஆனந்தத்தாண்டவங்காட்டி
ஆண்டுகொண்டருள்கை நின்னருளினுக்கழ்கே,

மூன்றாவது
## கோயிற்றிருவகவல்.

பாற்கடல்கடையப் படுங்கடுவெண்ணெயத்
திருமிடற்றடக்கிய சிவனேயடைக்கலம்
அடங்கலுமடக்கிடுங் கடுங்கொலைக்காலனைக்
காலெடுத்தடக்கிய கடவுணின்னடைக்கலம்
உலகடங்கலும்படைத் துடையவன்றலைபறித்
திடக்கயிலடக்கிய விறைவனின்னடைக்கலம்
செய்யபொன்னம்பலச் சேவநின்னடைக்கலம்
ஐயநின்னடைக்கல மடியநின்னடைக்கலம்
மனவழியலைந்திடுங் கனவெனும்வாழ்க்கையும்
விழுப்பொருளறியா வழக்குறுமனனும்
ஆணவமலத்துதித் தலைந்தலைந்திடு
நிணவைப்புழுவென நெளித்திடுசிந்தையும்

படிறும்பாவமும் பழிப்புறுநினைப்பும்
தவறுமழுக்காறு மிவருபொச்சாப்பும்
கவடும்பொய்யுஞ்சுவடும்பெருஞ்சின
விசலுங்கொலையு மிழிப்புறுபுன்மையும்
பகையுமச்சமுந் துணிவும்பனிப்பும்
முக்குணமடமையு மைம்பொறிமயக்கமும்
இடும்பையும்பிணியு மிடுக்கியவாக்கையை
உயிரெனுங்குருகுவிட் டோடுங்குரம்பையை
எலும்பொடுநரம்புகொண் டிடையிற்பிணித்துக்
கொழுந்தசைமேய்ந்து மொழுக்குவிழுங்குடிலைச்
செழும்பெழுவுதிரச் சிறுபுழுக்குரம்பையை
மலவுடற்குடத்தைப் புலவுடற்புட்டிலைத்
தொலைவிலாச்சோற்றுத் துன்பக்குழியைக்
கொலைபடைக்கலம்பல கிடைக்குங்கூட்டினை
சலிப்புறுவினைப்பல சாக்குக்குப்பையைக்
கோட்சரக்கொழுகும் பீறற்கோணியைக்
கோபத்தீமூட்டுங் கொல்லன்றுருத்தியை
ஐம்புலப்பரவை யடையும்பஞ்சரத்தைப்
புவராக்கவலை விளமரப்பொதும்பை
ஆசைக்கயிற்றி லாடும்பம்பரத்தைக்
காசிற்பணத்திற் சுழலுங்காற்றாடியை
மக்கள்வினையின் மயங்குந்திகிரியைக்
கடுவெளியுருட்டி யசகடக்காலைப்
பாவச்சரக்கொடு பவக்கடல்புக்குக்
காமக்காற் றெடுத்தலைப்பக்
கெடுவழிக்கரைசேர் கெடுமரக்கலத்தை
இருவினைவிலங்கொடு மியங்குபுற்கலனை
நடுவன்வந்தழைத்திட நடுங்கிடும்யாக்கையைப்
பிணமெனப்படுத்தியான் புறப்படும்பொழுதுநின்
னடிமலர்க்கமலத்துக் கபயநின்னடைக்கலம்
வெளியிடையுருமிடி யிடித்தெனவெறித்தெழுங்
கடுநடைவெள்விடைக் கடவுணின்னடைக்கலம்
இமையாநாட்டத் திறையேயடைக்கலம்
அடியார்க்கெளியா யடைக்கலமடைக்கலம்
மறையவர்தில்லை மன்றுணின்றாடிக்
கருணைமொண்டலையெறி கடலேயடைக்கலம்
தேவருமுனிவருஞ் சென்றுநின்றேத்தப்

பாசிழைக்கொடியொடு பரிந்தருள்புரியும்
எம்பெருமானின் னிணையடிக்கபயம்
அம்பலத்தரசே வடைக்கலமுனக்கே.

## நான்காவது

## கச்சித்திருவகவல்.

திருமால்பயந்த திசைமுகனமைத்து
வருமேழ்பிறவியு மானுடத்துதித்து
மலைமகள்கோமான் மலரடியிறைஞ்சிக்
குலவியசிவபதங் குறுகாதவமே
மாதனைமகிழ்ந்து காதல்கொண்டாடும்
மானிடர்க்கெல்லாம் யானெடுத்துரைப்பேன்
விளிவெளிமாக்க டெளிவுறக்கேண்மின்
முள்ளுங்கல்லு முயன்றுநடக்கும்
உள்ளங்காலைப் பஞ்செனவுணர்த்தும்
வெள்ளெலும்பாலே மேவியகணைக்காற்
றுள்ளும்வராலெனச் சொல்லித்துதிக்கும்
தசையுமெலும்புந் தக்கபுன்குறங்கை
இசையுங்கதலித் தண்டெனவியம்பியும்
நெடுமுடருங்கி நின்றிடுமிடையைத்
துடிபிடியென்று சொல்லித்துதித்தும்
மலமுஞ்சலமும் வழும்புந்திரையும்
அலையும்வயிற்றை யாலிலையென்றும்
சிலந்திபோலகிளைத்துமுன்னெழுந்து
திரண்டுவிம்மிச் சீப்பாய்ந்தேறி
உகிராற்கீற வுலர்ந்துள்ளுருகி
நகுவார்க்கிடமாய் நான்றுவற்றும்
முலையைப்பார்த்து முளரிமொட்டென்றும்
குலையுங்காமக் குருடர்க்குரைப்பேன்
நீட்டவுமுடக்கவு நெடும்பொருள்வாங்கவும்
ஊட்டவும்பிசையவு முதவியிங்கியற்று
அங்கையைப்பார்த்துக் காந்தளென்றுரைத்தும்
வேர்வையுமழுக்கு மேவியகழுத்தை

பாரினிலினிய கமுகெனப்பகர்ந்தும்
வெப்புழுத்தையு மேவியவாயைத்
துப்புமுரிக்கின் றூய்மலரொன்றும்
அன்னமுங்கறியு மசைவிட்டிறக்கும்
முன்னியபல்லை முத்தெனமொழிந்தும்
நீருஞ்சளியு நின்றுநின்றொழுகும்
கூரியமூக்கைக் குமிழெனக்கூறியும்
தண்ணீர்பீளை தவிராதொழுகும்
கண்ணைப்பார்த்துக் கழுநீரொன்றும்
உள்ளுங்குறும்பி யொழுகுங்காதை
வள்ளைத்தண்டின் வளமெனவாழ்த்தியும்
கையுமெண்ணையுங் கலவாதொழியில்
வெய்யவதரும் பேனும்விளையத்
தக்கதலையோட்டின் முளைத்தெழுந்த
சிக்கின்மயிரைத் திரண்முகிலென்றும்
சொற்பலபேசித் துதித்துநீங்கள்
நச்சிச்செல்லு நரகவாயில்
தோலுமிறைச்சியுந் துதைந்துசீப்பாயும்
காமப்பாழி கருவிளைகழனி
தூமைக்கடவழி தொலைபெறுவாயில்
எண்சாணுடம்பு மிழியும்பெருவழி
மண்பாற்காமங் கழிக்குமறைவிடம்
நச்சிக்காமுக ருயநாயென்றும்
இச்சித்திருக்கு மிடைகழிவாயில்
திங்கட்சடையோன் றிருவருளில்லார்
தங்கித்திரியுஞ் சவலைப்பெருவழி
புண்ணிதுவென்று புடைவையைமூடி
உண்ணீர்பாயு மோசைச்செழும்புன்
மால்கொண்டறியா மாந்தர்புகுவழி
நோய்கொண்டொழியா நுண்ணியர்போம்வழி
தருக்கியகாமுகர் சாரும்படுகுழி
செருக்கியகாமுகர் சேருஞ்சிறுகுழி
பெண்ணுமாணும் பிறக்கும்பெருவழி
மலஞ்சொரிந்திழியும் வாயிற்கருகே
சலஞ்சொரிந்திழியும் தண்ணீர்வாயில்

சொல்லார்நற்கோயினியமம்பலவகைத்தோத்திரமு
மெல்லாமுடிந்தபின்கொல்லுகண்டாய்கச்சியேகமபனே, (௩௨)

சடக்கடத்துக்கிரைதேடிப்பலவுயிர்தன்னைக்கொன்று
விடக்கடித்துக்கொண்டிறுமாந்திருந்துமிகமெலிந்து
படக்கடித்தின்றுழல்வார்கடமைக்கரம்பற்றிநம
னிடக்கடிக்கும்பொழுதேதுசெய்வார்கச்சியேகம்பனே (௩௩)

நாறுமுடலைநறிபொதிசோற்றினைநான்றினமுஞ்
சோறுங்கறியுநிறப்பியபாண்டத்தைத்தோகையர் தங்
கூறுமலமுமிரத்தமுஞ்சேருங்குழியில்விழா
தேரும்படியருள்வாயிறைவாகச்சியேகம்பனே. (௩௪)

சொக்கிட்டரமனைப்புககுட்டிருடியதுட்டர்வந்து
திக்குற்றமன்னரைக்கேட்பதுபோற்சிவநிந்தைசெய்து
மிக்குக்குருலிங்கசங்கமநிந்தித்துவீடிச்சிக்கு
மெக்குப்பெருத்தவர்க்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (௩௫)

விருந்தாகவந்தவர்தங்களுக்கன்னமிகக்கொடுக்கப்
பொருந்தார்வளம்பெறவாழ்வார்நின்னாமத்தைப்போற்றிநிற்ற
மருந்தாமுலைப்பங்கரென்னாதபாதகரம்புவியி
லிருந்தாவதேதுகண்டாயிறைவாகச்சியேகம்பனே (௩௬)

எல்லாமறிந்துபடித்தேயிருந்தெமக்குள்ளபடி
வல்லானறிந்துளனென்றுணராதுமதிமயங்கிச்
சொல்லான்மலைந்துறுசூழ்விதியின்படிதுக்கித்துப்பி
னெல்லாஞ்சிவன்செயலேயென்பர்காண்கச்சியேகம்பனே. (௩௭)

பொன்னைநினைந்துவெகுவாகத்தேடுவர்பூவையன்ன
டன்னைநினைந்துவெகுவாயுருகுவர்தாரணியி
லுன்னைநினைந்திங்குனைப்பூசியாதவுலுத்தரெல்லா
மென்னையிருந்துகண்டாயிறைவாகச்சியேகம்பனே. (௩௮

கடுஞ்சொல்லின்வம்பரையீனரைக்குண்டரைகாமுகரைக்
கொடும்பவமேசெயுநிர்மூடர்தம்மைக்குவலயத்து
னெடும்பனைபோலவளர்ந்துநல்லோர்தநெறியறியா
விடும்பரையேன்படைத்தாயிறைவாகச்சியேகம்பனே. (௩௯)

கொன்றேனனேகமுயிரையெல்லாம்பின்புகொன்றுகொன்று
தின்றேனதன்றியுந்தீங்குசெய்தேனதுதீர்க்கவென்றே
நின்றேநின்சந்நிதிக்கேயதனாற்குற்றநீபொறுப்பா
யென்றேயுனைநம்பினேனிறைவாகச்சியேகம்பனே. (௪௰)

அன்னையெத்தனை யெத்தனையன்னையோ வப்பனெத்தனை யெத்த
னையப்பனோ, பின்னையெத்தனை யெத்தனைபெண்டிரோ பிள்ளையெத்

தனை யெத்தனைபிள்ளையோ, முன்னையெத்தனை யெத்தனைஜென்மமோ
மூடனுயடியேனுமறிந்திலே, னின்னமெத்தனையெத்தனைசென்மமோ
வென்செய்வேன்கச்சி யேகம்பநாதனே. (௧)

## திருத்தில்லை

காம்பிணங்கும்பணைத்தோளார்க்கும்பொன்னுக்குங்காசினிக்கும்
தாம்பிணங்கும்பலவாசையும்விட்டுத்தனித்துச்செத்துப்
போம்பிணந்தன்னைத்திரளாகக்கூடிப்புரண்டினிமேற்
சாம்பிணங்கத்துதையோவென்செய்வேன்றில்லைச்சங்கரனே (௧)

சோறிடுநாடுதுணிதருங்குப்பைதொண்டன்பறைக்கண்
டேறிடுங்கைகளிறங்கிடுந்தீவினையெப்பொழுது
நீறிடும்மேனியர்சிற்றம்பலவர்நிருத்தங்கண்டா
லூறிடுங்கண்களுருகிடுநெஞ்சமென்னுள்ளமுமே. (௨)

அழலுக்குள்வெண்ணெயெனவேயுருகிப்பொன்னம்பலத்தார்
நிழலுக்குணின்றுதவமுஞற்றுமனிட்டேமின்னார்
குழலுக்கிசைந்தவகைமாலைக்கொண்டுகுற்றேவல்செய்து
விழலுக்குமுத்துலையிட்டிறைத்தேனென்விதிவசமே. (௩)

ஓடாமற்பாழுக்குழையாமலோரமுரைப்பவர்பாற்
கூடாமனல்லவர்கூட்டம்விடாமல்வெங்கோபநெஞ்சி
னாடாமனன்மைவழுவாமலின்றைக்குநாளைக்கென்று
தேடாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே. (௪)

பாராமலேற்பவற்கில்லையென்னுமற்பழுதுசொல்லி
வாராமற்பாவங்கள்வந்தணுகாமன்மனமயர்ந்து
பேராமற்சேவைபிரியாமலன்புபெறுதவரை
சேராமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே (௫)

கொல்லாமற்கொன்றதைத்தின்னாமற்குத்திரங்கோள்களவு
கலலாமற்கைதவரோடிணங்காமற்கனவினும்பொய்
செல்லாமற்சொற்களைக்கேளாமற்றோகையர்மாயையிலே
சொல்லாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே (௬)

முடிசார்ந்தமன்னருமற்றுமுள்ளோருமுடிவிலொரு
பிடிசாம்பலாய்வெந்துமண்ணாவதுங்கண்டுபின்னுமிந்தப்
படிசார்ந்தவாழ்வைநினைப்பதல்லாற்பொன்னினம்பலவ
ரடிசார்ந்துநாமுய்யவேண்டுமென்றேயறிவாரில்லையே. (௭)

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியிற்
சாலவுபாதிபசிதாகமாகுமுற்சஞ்சிதமா
மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே
யாலமுகந்தருளம்பலவாவென்னையாண்டருளே. (௮)

ஆயும்புகழ்தில்லையம்பலவாணருகிற்சென்ருற்
பாயுமிடபங்கடிக்குமரவம்பின்பற்றிச்சென்ருற்
பேயுங்கணமும்பெருந்தலைப்பூதமும்பின்ருெடரும்
போயென்செய்வாய்மனமேபிணக்காடவர்போமிடமே (௯)

ஓடுமெடுத்தளாடையுஞ்சுற்றியுலாவிமெள்ள
வீடுகடோறும்பலிவாங்கியேவிதியற்றவர்போ
லாடுமருட்கொண்டிங்கம்பலத்தேநிற்குமாண்டிதன்னைத்
தேடுங்கணக்கென்னகாண்சிவகாமசவுந்தரியே. (௰)

ஊட்டுவிப்பானுமுறக்குவிப்பானுமிங்கொன்ருெடொன்றை
மூட்டிவிப்பானுமுயக்குவிப்பானுமுயன்றவினை
காட்டுவிப்பானுமிருவினைப்பாசங்கயிற்றினவழி
யாட்டுவிப்பானுமொருவனுண்டேதில்லையம்பலத்தே. (௰௧)

அடியார்க்கெளியவரம்பலவாணரடிபணிந்தான்
மடியாமற்செல்வவரம்பெறலாம்வையமேழளந்த
நெடியோனும்வேதனுங்காணுதநித்தநிமலனருட்
குடிகாணுநாங்களவர்காணுமெங்கள்குலதெய்வமே. (௰௨)

தெய்வச்சிதம்பரதேவாவுன்சித்தந்திரும்பிவிட்டார்
பொய்வைத்தசொப்பனமாமன்னர்வாழ்வும்புவியுமெங்கே
மெய்வைத்தசெல்வமெங்கேமண்டலீகர்தம்மேடையெங்கே
கைவைத்தநாடகசாலையெங்கேயிதுகண்மயக்கே. (௰௩)

உடுப்பானும்பாலன்னமுண்பானுமுய்வித்தொருவர்தம்மைக்
கெடுப்பானுமேதென்றுகேள்விசெய்வானும்கெதியடங்கக்
கொடுப்பானுந்தேகியென்றேற்பானுமேற்கக்கொடாமனின்று
தடுப்பானுநீயல்லையோதில்லையானந்தத்தாண்டவனே. (௰௪)

வித்தாரம்பேசினுஞ்சோங்கேறினுங்கம்பமீதிருந்து
தத்தாவென்ருேதிப்பவுரிகொண்டாடினுந்தம்முன்றம்பி
யொத்தாசைபேசினுமாவதுண்டோதில்லையுண்ணிறைந்த
கத்தாவின்சொற்படியல்லாதுவேறில்லைகன்மங்களே (௰௫)

பிறவாதிருக்கவரந்தரல்வேண்டும்பிறந்துவிட்டா
லிறவாதிருக்கமருந்துண்டுகாணிதுவெப்படியோ
வறமார்புகழ்த்தில்லையம்பலவாணரடிக்கமல
மறவாதிருமனமேயதுகாணன்மருந்துனக்கே, (௰௬)

தவியாதிருநெஞ்சமேதில்லைமேவியசங்கரனைப்
புவியார்திருக்கின்றஞானகரனைப்புராந்தகனை

யவியாவிளக்கையென்னம்பலத்தாடியையைந்தெழுத்தாற்
செவியாமனிசெவித்தாற்பிறவாமுத்திசித்திக்குமே. (௰எ)

நாலின்மறைப்பொருளம்பலவாணனைநம்பியவர்
பாலிலொருதரஞ்சேவிக்கொணுதிருப்பார்க்கருங்கல்
மேலிலெடுத்தவர்கையிலங்கைத்தைப்பர்மீண்டுமொரு
காலினிறுத்துவர்கிட்டியுந்தாம்வந்துகட்டுவரே (௰அ)

ஆற்றேடுதும்பையணிந்தாடுமம்பலவாணர்தமைப்
போற்றுதவர்க்கடையாளமுண்டேயிந்தப்பூதலத்திற்
சோற்றுவியற்றுச்சுகமற்றுச்சுற்றத்துணியுமற்றே
யேற்றாலும்பிச்சைகிடையாமலேக்கற்றிருப்பார்களே. (௰௯)

அத்தனைமுப்பத்துமுக்கோடிதேவர்க்கதிபதியை
நித்தனையம்மைசிவகாமசுந்தரிநேசனையெங்
கத்தனைப்பொன்னம்பலத்தாடுமையனைக்காணக்கண்க
ளெத்தனைகோடியுகமோதவஞ்செய்திருக்கின்றவே. (உ௰)

திருச்செங்காடு

நெருப்பானமேனியர்செங்காட்டிலாத்திநிழலருகே
யிருப்பார்திருவுளமெப்படியோவின்னமென்னையன்னைக்
கருப்பாசயக்குழிக்கேதள்ளுமோகண்ணன்காணரிய
திருப்பாதமேதருமோதெரியாதுசிவன்செயலே. (க)

திருவொற்றியூர்

ஐயுந்தொடர்ந்துவிழியுஞ்சொருகியரிவழிந்து
மெய்யும்பொய்யாகிவிடுகின்றபோதொன்றுவேண்டுவன்யான்
செய்யுந்திருவொற்றியூருடையீர்திருநீறுமிட்டுக்
கையுந்தொழப்பண்ணியைந்தெழுத்தோதவுங்கற்பியுமே. (க)

சுடப்படுவாரறியார்புரமூன்றையுஞ்சுட்டபிரான்
றிடப்படுமாமதிற்றென்னொற்றியூரன்றெருப்பறப்பி
னடப்பவர்பொற்பதந்தலைமேற்படவுநன்குருண்டு
கிடப்பதுகாண்மனமேவிதியேட்டைக்கிழிப்பதுவே (உ)

திருவிடைமருதூர்

காடேதிரிந்தென்னகாற்றேபுசித்தென்னகந்தைசுற்றி
யோடேயெடுத்தென்னவுள்ளன்பிலாதவரோங்குவிண்ணோர்
நாடேயிடைமருதீசர்க்குமெய்யன்பர்நாரியர்பால
வீடேயிருப்பினுமெய்ஞ்ஞானவீட்டின்பமேவுவரே. (க)

தாயும்பகைகொண்டபெண்டீர்பெரும்பகைதன்னுடைய
சேயும்பகையுறவோரும்பகையிச்செகமும்பகை

யாயும்பொழுதிலருஞ்செல்வநீங்கிலிங்காதலின்றற்
றேயுநெஞ்சேமருந்தீசர்பொற்பாதஞ்சுதந்திரமே. (௨)

## திருக்கழுக்குன்றம்.

காடோசெடியோகடற்புறமோகனமேமிருந்த
நாடோநகரோநகர்நடுவோநலமேமிருந்த
வீடோபுறந்திண்ணையோதமியேனுடல்வீழுமிட
நீடோய்கழுக்குன்றிலீசாவுயிர்த்துணைநின்பதமே. (௧)

## திருக்காளத்தி.

பத்தும்புகுந்துபிறந்துவளர்ந்துபட்டாடைசுற்றி
முத்தும்பவளமும்பூண்டோடியாடிமுடிந்தபின்பு
செத்துக்கிடக்கும்பிணத்தருகேயினிச்சாம்பிணங்கள்
கத்துங்கணக்கென்னகாண்கயிலாபுரிக்காளத்தியே. (௧)

பொன்னாற்பிரயோசனம்பொன்படைத்தார்க்குண்டுபொன்படைத்தோன்
றன்னாற்பிரயோசனம்பொன்னுக்கங்கேதுண்டத்தன்மையைப்போ
லுன்னாற்பிரயோசனம்வேணதெல்லாமுண்டுனைப்பணியு
மென்னாற்பிரயோசனமேதுண்டுகாளத்தியீசுரனே. (௨)

வாளான்மகவரிந்தூட்டவல்லேனல்லன்மாதுசொன்ன
சூளாலிளமைதுறக்கவல்லேனல்லன்றொண்டுசெய்து
நாளாறிற்கண்ணிடந்தப்பவல்லேனல்லனானினிச்சென்
றாளாவதெப்படியோதிருக்காளத்தியப்பருக்கே. (௩)

முப்போதுமன்னம்புசிக்கவுந்தூங்கவுமோகத்தினாற்
செப்போதிளமுலையாருடன்சேரவுஞ்சீவன்விடு
மப்போதுகண்கலக்கப்படவும்மமைத்தாயையனே
யெப்போதுகாணவல்லேன்றிருக்காளத்தியீசுரனே, (௪)

இரைக்கேயிரவும்பகலுந்திரிந்திங்கிளைத்துமின்னா
ரரைக்கேயவலக்குழியருகேசுகம்பார்த்தொழுகும்
புரைக்கேயுழலுந்தமியேனையாண்டருள்பொன்முகலிக்
கரைக்கேகல்லாலநிழற்கீழமர்ந்தருள்காளத்தியே. (௫)

நாறுங்குருதிச்சலதாரைதோற்புரைநாடொறுஞ்சீ
யூறுமலக்குழிகாமத்துவாரமொலித்திடும்புண்
டேறுந்தசைப்பிளப்பந்தரங்கத்துட்சிற்றின்பம்விட்
டேறும்பதந்தருவாய்திருக்காளத்தியீசுரனே. (௬)

## திருக்கைலாயம்.

கான்சாயுவெள்ளிமலைக்கரசேநின்கழனம்பினே
னூன்சாயுஞ்சென்மமொழித்திடுவாய்கரவூரனுக்காய்

மான்சாயச்செங்கைமழுவலஞ்சாயவனைந்தகொன்றைத்
தேன்சாயநல்லதிருமேனிசாயச்சிவக்கொழுந்தே, (க)

இல்லந்துறந்துபசிவந்தபோதங்கிரந்துதின்று
பல்லுங்கறையற்றுவெள்ளாயுமாயொன்றிற்பற்றுமின்றிச்
சொல்லும்பொருளுமிழந்துசுகானந்தத்தூக்கத்திலே
யல்லும்பகலுமிருப்பதென்றோகைலாயத்தனே; (உ)

சினந்தனையற்றுபிரியமுந்தானற்றுசெய்கையற்று
நினைந்ததுமற்றுநினையாமையுமற்றுநிர்ச்சிந்தனாய்த்
தனந்தனியேயிருந்தானந்தநித்திரைதங்குகின்ற
வனந்தனிலென்றிருப்பேனத்தனேகைலாயத்தனே (ங)

கையாரவேற்றுநின்றங்ஙனந்தின்றுகரித்துணியை
தையாதுடுத்துநின்சந்நிதிக்கேவந்துசந்ததமு
மெய்யாரநிற்பணிந்துள்ளேயுரோமம்விதிர்விதிர்ப்ப
வையாவென்றோலமிடுவதென்றோகைலாயத்தனே [ச)

நீருர்த்தமேனியுரோமஞ்சிலித்துளமெக்குநெக்குச்
சேறுய்க்கசிந்துகசிந்தேயுருகிநின்சீரடிக்கே
மாறுதியானமுற்றானந்தமேற்கொண்டுமார்பில்கண்ணி
ராறாய்ப்பெருகக்கிடப்பதென்றோகைலாயத்தனே, (ரு)

செல்வரைப்பின்சென்றுசங்கடம்பேசித்தினந்தினமும்
பல்லினைக்காட்டிப்பரிதவியா மற்பரானந்தத்தி
னெல்லையிற்புக்கிடவேகாந்தமாயெனக்காமிடத்தே
யல்லலற்றென்றிருப்பேனத்தனேகைலாயத்தனே (சு)

பந்திக்குருளையொத்தேனில்லைநாயேன்வழக்கறிதும்
சிந்திக்குஞ்சிந்தையையானென்செய்வேனெனைத்தீதகற்றிப்
புந்திப்பரிவிற்குருளையையேந்திப்பூசையைப்போ
லெந்தைக்குரியவன்காணத்தனேகைலாயத்தனே, (எ)

வருந்தேன்பிறந்துமிறந்துமயக்கும்புலன்வழிபோய்ப்
பொருந்தேநரகிற்புகுகின்றிலேன்புகழ்வாரிடத்தி
விருந்தேனினியவர்கூட்டம்விடேனியலஞ்செழுத்தா
மருந்தேனருந்துவனின்னருளாற்கைலாயத்தனே (அ)

மதுரை

விடப்படுமோவிப்பரபஞ்சவாழ்க்கையைவிட்டுமனந்
திடப்படுமோநின்னருளின்றியேதினமேயலையக்
கடப்படுமோவற்பர்வாயிலிற்சென்றுகண்ணீர்ததும்பிப்
படப்படுமோசொக்கநாதாசௌந்தரபாண்டியனே, (க)

பொது

உடைகோவணமுண்டுறங்கப்புறந்திண்ணையுண்டுணவிங்
கடைகாயிலையுண்டருந்தத்தண்ணீருண்டருந்துணைக்கே

விடையேறுமீசர்திருநாமமுண்டிந்தமேதினியில்
வடகோடுயர்ந்தென்னதென்கோடுசாய்ந்தென்னவான்பிறைக்கே, (௧)

வீடுநமக்குதிருவாலங்காடுவிமலர்தந்த
வோடுநமக்குண்டுவற்றாதபாத்திரமோங்குசெல்வ
நாடுநமக்குண்டுகேட்டதல்லாந்தரநன்னெஞ்சமே
யீடுநமக்குச்சொலவோவொருவருமிங்கில்லையே. (௨)

நாடிக்கொண்டீசனைநாட்டமுற்றாயிலைநாதரடி
தேடிக்கொண்டாடித்தெளிந்தாயிலைசெகமாயைவந்து
மூடிக்கொண்டோமென்றுங்காமாயுதக்கண்முனிந்தவென்றும்
பீடிப்பையோநெஞ்சமேயுனைப்போலில்லைப்பித்தர்களே (௩)

கையொன்றுசெய்யவிழியொன்றுநாடக்கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு
மெய்யொன்றுசாரச்செவியொன்றுகேட்கவிரும்புமியான்
செய்கின்றபூசையெவ்வாறுகொள்வாய்வினைதீர்த்தவனே. (௪)

கண்ணுண்டுகாணக்கருத்துண்டுநோக்கக்கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச்செவியுண்டுகேட்கப்பல்ச்சிலையா
லெண்ணுண்டுசாத்தவெதிர்நிற்கவீசனிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோகெடுவீரிந்தமானிடமே (௫)

சொல்லினுஞ்சொல்லின்முடிவினும்வேதச்சுருதியினு
மல்லினுமாசற்றவாகாயந்தன்னினுமாய்ந்துவிட்டோ
ரில்லினுமன்பரிடத்தினுமீசனிருக்குமிடங்
கல்லினுஞ்செம்பினுமோவிருப்பானெங்கள்கண்ணுதலே. (௬)

வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினைதானொழிந்தாற்
றினைப்போதளவுநில்லாதுகண்டாய்சிவன்பாதநினை
நினைப்போரைமேவுநினையாரைநீங்கிநெறியினின்று
லுனைப்போலொருவருண்டோமனமேயெனக்குற்றவரோ. (௭)

பட்டைக்கிழித்துப்பருவூசிதன்னைப்பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென்மொய்குழலாள்கையின்முன்கொடுத்துக்
கட்டியிருந்தகனமாயக்காரிதன்காமமெல்லாம்
விட்டுப்பிரியவென்றோவிங்ஙனேசிவன்மீண்டதுவே. (௮)

சூதுற்றகொங்கையுமானார்கலவியுஞ்சூழ்பொருளும்
போதுற்றபூசலுக்கென்செயலாஞ்செய்தபுண்ணியத்தாற்
றீதற்றமன்னவன்சிந்தையினின்றுதெளிவதற்கோ
காதற்றவூசியைத்தந்துவிட்டானென்றன்கைதனிலே. (௯)

வாதுற்றதிண்புயரண்ணாமலையர்மலர்ப்பதத்தைப்
போதுற்றெப்போதும்புகலுநெஞ்சேயிந்தப்பூதலத்திற்
றீதுற்றசெல்வமென்றேடிப்புதைத்ததிரவியமென்
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே (௰)

வேதத்தினுட்பொருண்மண்ணாசைமங்கையைவிட்டுவிடப்
போதித்தவன்மொழிகேட்டிலையோசெய்தபுண்ணியத்தா
லாதித்தன்சந்திரன்போலேவெளிச்சமதாம்பொழுது
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே. (௧௧)

மனையாளும்மக்களும்வாழ்வுந்தனமுந்தன்வாசன்மட்டே
யினமானசுற்றமயானமட்டேவழிக்கேதுதுணை
தினையாமளவெள்ளளவாகினுமுன்புசெய்ததவந்
தனையாளவென்றும்பரலோகஞ்சித்திக்குஞ்சத்தியமே. (௧௨)

அத்தமும்வாழ்வுமகத்துமட்டேவிழிப்பொழுகம்
மெத்தியமாதரும்வீதிமட்டேவிம்மிவிம்மியிரு
கைத்தலமேல்வைத்தழுமைந்தருஞ்சுடுகாடுமட்டே
பற்றித்தொடருமிருவினைப்புண்ணியபாவமுமே (௧௩)

சீயுங்குருதிச்செழுநீர்வழும்புஞ்செறிந்தெழுந்து
பாயும்புடைவையொன்றில்லாதபோதுபகலிரவா
யீயுமெறும்பும்புகுகின்றயோனிக்கிரவுபகன்
மாயுமனிதனைமாயாமல்வைக்கமருந்தில்லையே. (௧௪)

சீதப்பனிக்குண்டுசிக்கெனக்கந்தைதினம்பிரந்து
நீதுய்யச்சோறுமனைதோறுமுண்டுநினைவெழுந்தால்
வீதிக்குணல்லவிலைமாதருண்டிந்தமேதினியி
லேதுக்குநீசலித்தாய்மனமேயென்றும்புண்படவே. (௧௫)

ஆறுண்டுதோப்புண்டணிவீதியம்பலந்தானுமுண்டு
நீறுண்டுகந்தைநெடுங்கோவணமுண்டுநித்தநித்த
மாறுண்டுலாவிமயங்குநெஞ்சேமனைதோறுஞ்சென்று
சோறுண்டுதூங்கிப்பின்சும்மாவிருக்கச்சுகமுமுண்டே. (௧௬

உடுக்கக்கவிக்கக்குளிர்காற்றுவெய்யிலுடங்கிவந்தாற்
றடுக்கப்பழையவொருவேட்டியுண்டுசகமுழுதும்
படுக்கப்புறந்திண்ணையெங்கெங்குமுண்டுபசித்துவந்தாற்
கொடுக்கச்சிவனுண்டுநெஞ்சேநமக்குக்குறைவில்லையே. (௧௭)

மாடுண்டுகன்றுண்டுமக்களுண்டென்றுமகிழ்வதெல்லாங்
கேடுண்டெனும்படிகேட்டுவிட்டோமினிக்கேண்மனமே

போடுண்டுகந்தையுண்டுள்ளேயெழுத்தைந்துமோதவுண்டு
தோடுண்டகண்டனடியார்நமக்குத்துணையுமுண்டே. (௧௮)

மாத்தானவத்தையுமாயாபுரியின்மயக்கத்தையு
நீத்தார்தமக்கொருநிட்டையுண்டோநித்தனன்புகொண்டு
வோத்தார்குளித்துப்பசித்தாற்புசித்துவிழிதுயின்று
பார்த்தாலுலகத்தவர்போலிருப்பர்பற்றற்றவரே (௧௯)

ஒன்றென்றிருதெய்வமுண்டென்றிருவுயர்செல்வமெல்லா
மன்றென்றிருபசித்தோர்முகம்பார்நல்லறமுநட்பு
நன்றென்றிருநடுநீங்காமலேநமக்கிட்டபடி
யென்றென்றிருமனமேயுனக்கேயுபதேசமிதே. (௨௰)

நாட்டமென்றேயிருசற்குருபாதத்தைநம்பபொம்ம
லாட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே. (௨௧)

என்செயலாவதியாதொன்றுமில்லையினித்தெய்வமே
யுன்செயலேயென்றுணரப்பெற்றேனிந்தவூனெடுத்த
பின்செய்ததீவினையாதொன்றுமில்லைபிறப்பதற்கு
முன்செய்ததீவினையோவிங்ஙனேவந்துமூண்டதுவே (௨௨)

திருவேடமாகித்தெருவிற்பயின்றெனைத்தேடிவந்து
பரிவாகப்பிச்சைபகருமென்றுனைப்பதம்பணிந்தேன்
கருவாருமேதக்கடற்கரைமேவக்கருதுமென்னை
யுருவாக்கிக்கொள்ளவல்லோவிங்ஙனேசிவனுற்றதுவே (௨௩)

விட்டேனுலகம்விரும்பேனிருவினைவீணருடன்
கிட்டேனவருரைகேட்டுமிரேன்மெய்கெடாதநிலை
தொட்டேன்சுகதுக்கமற்றுவிட்டேன்தொல்லைநான்மறைக்கு
மெட்டேனெனும்பரமென்னிடத்தேவந்திங்கெய்தியதே. (௨௪)

அட்டாங்கயோகமுமாதாரமாறுமவத்தையைந்தும்
விட்டேறிப்போனவெளிதனிலேவியப்பொன்றுகண்டேன்
வட்டாகிச்சம்மதிப்பாலூறலுண்டுமகிழ்ந்திருக்க
வெட்டாதபேரின்பமென்னைவிழிங்கியிருக்கின்றதே. (௨௫)

எரியெனக்கென்னும்புழுவோவெனக்கென்னுமிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும்பருந்தோவெனக்கெனுந்தான்புசிக்க
நரியெனக்கென்னும்புன்னாயெனக்கென்னுமிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தேனிதனாலென்னபேறெனக்கே. (௨௬)

அண்ணரன்வீதியாசிருப்பாகுமணிபடையோர்
நண்ணொருநாலொன்பதாமவரோவலுநண்ணுமிவ்வூர்

